THE

# VIVEKA CHINTAMANI,

## MONTHLY TAMIL MAGAZINE AND REVIEW,

Devoted to the Diffusion of General Knowledge.

"Knowledge is power."

**VOL. X.**

MAY 1901—APRIL 1902.

# விவேகசிந்தாமணி.

அறிவைப்பரவச்செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகை.

"அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர்."—குறள்.

10-ம் புத்தகம்.

(1901-ம் ௵ மே ௴ முதல் 1902-ம் ௵ ஏப்பிரல் ௴ வரை.)

PUBLISHED BY

C. V. SWAMINATHA AIYAR,

*Secretary, Diffusion of Knowledge Agency, Triplicane,*

Madras.

1901-1902.

# INDEX TO CONTENTS.

## VOL. X.

லேசான காகிதப்பதிப்பு.
தனிப்பிரதி, 5½ அணா.
பழைய பிரதி, 6 ,,



சந்தாவின் விவரம்.
ஒரு வருஷத்துக்கு ரூ. 4.
6 மாதத்துக்கு ,, 2-2.




*The Publishing Agency reserves to itself the right of republishing separately matters that appear in the Viveka Chintamani.*

புத்தகம் 10.] 1901ளு மேமீ [இலக்கம் 1.

## Terms of Subscription to the 'Viveka Chintamani.'

**Thick Paper Edition** for Patrons, Reading Rooms, School and Circulating Libraries, &c.

Minimum Subscription Rs. 5 per annum.

Single Copy 7½ As.: Back Nos. 8 As. each.

ENGLISH & FOREIGN SUBSCRIPTION 7*s.* 6*d.* NET PER ANNUM.

**Thin Paper Edition** for the People:—

SUBSCRN. PRICE: YEARLY RS. 4; HALF-YEARLY RS. 2-2.

SINGLE COPY, CURRENT NO. 5½ AS.; BACK NOS. 6 AS. EACH.

ENGLISH & FOREIGN SUBSCRIPTION 5*s.* 6*d.* NET PER ANNUM.

**If strictly Prepaid** at the commencement of the term, (*i. e.*, in May of each year) 8 As. discount, off the annual rate, and 4 As. off the half-yearly rate.

Subscriptions entered to begin with only April or May of each year. Enrolled Subscribers may not withdraw except at the end of the year.

☞ To regular annual subscribers 2 months' grace is allowed for the prepayment of subscription, and in the case of regular half-yearly subscribers 3 weeks' time, within which all subscriptions should be paid to entitle them to the discounts allowed.

Subscriptions cannot be closed in the middle of a *Volume*, though regular subscribers may elect to pay their subscriptions in half-yearly instalments. *All notices for discontinuance are to be given in the beginning of the new year, i. e., in April or May; for otherwise one should have to pay for the whole of the current volume.* Outstanding subscriptions are often realised by V. P. P. to prevent accumulation of arrears.

In all business correspondence, Subscribers are requested to quote their register number found on the wrapper, as it would ensure prompt attention and save vexatious delay and needless correspondence.

### விவேகசிந்தாமணி சந்தாவிவரம்.

தளமான காகிதப்பதிப்பு:—அத்தியக்ஷர்கள், ரீடிங்ரூம்கள், புத்தகசாலைகள் முதலான ஸ்தாபனங்களுக்கு உபயோகமானது. ☞ வருஷ சந்தா குறைந்தது ரூ. 5. தனிப்பிரதி 7½ அணா. பழைய பிரதி 8 அணா.

லேசானகாகிதப்பதிப்பு:—சாதாரணமாய் எல்லா ஜனங்களுக்கும் உபயோகமானது.

வருஷசந்தா ரூ. 4. 6-மாசத்துக்கு ரூ. 2-2.
தனிப்பிரதி 5½ அணா. பழைய பிரதி 6 அணா.

வருஷாரம்பத்திலே (அதாவது மேமாசத்தில்) தவறுமல் கட்டினால் வருஷசந்தாவில் 8 அணாவும், 6-மாச சந்தாவில் 4 அணாவும் தள்ளிக்கொடுக்கப்படும்.

எப்பிரல் அல்லது மேமாதம் துவக்கியே சந்தாக்கணக்கு வைக்கப்படும். ரிஜிஸ்தரான சந்தாதாரர்கள் வருஷமுடிவிலன்றி மற்றபடி சந்தாவை நிறுத்துதல் கூடாது.

☞ வருஷக்கணக்காக ஒழுங்காய்ச் சந்தாசெலுத்திவருகிறவர்களுக்கு இரண்டு மாசத்தவணையும், 6-மாசக்கணக்காக ஒழுங்காய்ச்சந்தா செலுத்திவருகிறவர்களுக்கு மூன்று வாரத்தவணையும் கொடுக்கப்படும். அதற்குள் சந்தாவை முன்பணமாகச் செலுத்துகிறவர்களுக்கே மேற்கண்ட தள்ளுபடி செய்துகொடுக்கப்படும்.

பத்திரிகையை வருஷமத்தியில் நிறுத்தக்கூடாது. நிறுத்தவிரும்புகிறவர்கள் வருஷாரம்பத்தில் அதாவது எப்பிரல் அல்லது மே மாசத்திலே நோட்டீஸ் கொடுக்கவேண்டும்; அப்படிக்கின்றி மத்தியில் நிறுத்தினால் அந்தவருஷ முழுவதற்குமுள்ள சந்தாவைச் செலுத்திவிடவேண்டும். சந்தாபாக்கிகள் V. P. P. மூலமாக வசூல்செய்யப்படும்.

கையொப்பக்காரர்கள் ஆபீசுக்குக் கடிதமெழுதும்போதெல்லாம் அவர்கள் ரிஜிஸ்தர் நம்பரைக் குறிப்பிட்டெழுதவேண்டும். அப்படிச்செய்வதால் அவர்கள் எழுதும் கடிதம் உடனே கவனிக்கப்படுவதன்றி அதிக தாமதத்துக்கும் வீண் கடிதப்போக்குவரவுக்கும் இடமிராது.

## On the Threshold of the Tenth Year.

## 10-வது வருஷாரம்பம்.

இந்த விவேகசிந்தாமணிப்பத்திரிகை துவக்கி 9-வருஷகாலம் முடிந்துபோய், இந்தச்சஞ்சிகையோடு 10-வது வருஷம் ஆரம்பமாகிறது. சென்ற வருஷத்தில் அதற்குமுன் நடந்துவந்ததுபோல் பத்திரிகை அந்தந்த மாசம் முதல் தேதியில் கிரமமாக வெளிவரத் தவறியது எல்லாருக்கும் தெரிந்தவிஷயம். சென்ற ஜுலைமீ முதல்தான் இவ்விதத் தாமதம் உண்டாக நேரிட்டது. அப்படித்தாமதிக்க நேரிட்டதில் நமது கையொப்பக்காரர்களுக்கு எவ்வளவு வருத்தமிருக்கலாமோ அதைவிட அதிகமாகவே எமக்கு இருந்துவந்தது. ஆனால் இந்தப்பிரபஞ்சத்தில் மனிதன் தானாகச்செய்யுங் காரியம் எதுவும் குறைவின்றி நிறைவேறுகிறதில்லை. மனிதன் அவன்செய்யும் கருமங்களில் ஸ்வாதீனமற்றுப் பராதீனனாயிருக்கிறான். மனிதன் பரிபூரணனாகும் வரையில் அவன் தொடங்கும் எதுவும் பரிபூரணமாகிறதில்லை. இது இந்த ஜகத்துக்கே இயல்பாயுள்ள குறை. இக்குறையைப்பற்றி வருந்தி வாதனைப்பட்டு மண்டையை யுடைத்துக்கொள்வதனால் இன்னு மதிகச்சேதம் உண்டாவதன்றி வேறு பிரயோஜனமொன்றையும் காணோம். இப்பத்திரிகை துவக்கியதுமுதல் யாம் இதிலுழைத்துவரும்படி நேரிட்டது தெய்வசங்கற்பமேயன்றி வேறன்றென்னு மெண்ணம் எமக்கு உதித்து வருஷத்துக்கு வருஷம் அது விசதமாகி உறுதிப்பட்டு வந்தது. இரண்டுவருஷங்களுக்குமுன் "ஸப்த அப்தபூர்த்தி" யென்னும் தலைப்பெயரிட்டு நாம் எழுதியதில் இக்கருத்தை நன்றாக விளக்கிக்காட்டியுள்ளோம். அங்கு இப்பத்திரிகையை நடத்துவதில் "மலைபோல் வந்த இடர்களெல்லாம்" தெய்வானுக்கிரகத்தால் "பனிபோல் நீங்கப்பெறும் காக்ஷியைக் காணும் பாக்கியம் பெற்ற" உண்மையை உரைத்து, "இப்படிப்பட்ட சமயங்களில்தான் நாம் மேற்போட்டுக்கொண்டவேலை தெய்வசங்கற்பத்தால் எடுத்துக்கொள்ள நேர்ந்ததென்றும், கடவுள் நமக்குக் கொடுத்துள்ள அற்ப சக்தியையும் சொற்ப ஊக்கத்தையும் முழுமனத்தோடு அவருக்கு அர்ப்பணஞ்செய்து சுத்தஹிருதயத்தோடு உழைத்து வருவதொன்றைத் தவிர நாம் செய்யத்தக்கது வேறொன்றுமில்லை யென்று முணர்ந்து, உணர்ந்தவாறு காரியத்தில் நடந்துகொள்ள ஊக்கமளிக்கப்பெற்றோம்"—என்று வரைந்துள்ளோம். இதனை எழுதியபின் சென்ற இரண்டு வருஷகாலத்தில் நடந்தவற்றால் சுத்தஹிருதயத்தோடு பயனையிச்சிக்காமல், அதாவது, ஈசுவரார்ப்பணம் செய்து வேலைசெய்துவருவதன் மகிமை யின்னதென்று நன்றாக விளங்கியது. மோக்ஷசாம்ப்ராஜ்யமே ஜன்மசாபல்யமென்று போதிக்கும் நமது சாஸ்திரங்களும் வேதாந்தக்கிரந்தங்களும் பரகதியடைய இச்சிக்கிறவன் கருமத்தைவிட்டு, குடும்பத்தைவிட்டு, ஸந்நியாசியாகி ஓடுங்கையுமாய் ஊர்ப்பிச்சைவாங்கித் திரியச் சொல்கின்றனவென்று நம்மனோர் சாதாரணமாகவும் அந்நியர்கள் விசேஷமாகவும் ஒருவித தப்பெண்ணங்கொண்டிருக்கிறார்கள். இது சுத்தப்பிசகு என்பது சுத்த ஹிருதயத்தோடு நிஷ்காம்யகருமம் செய்பவனுக்குத் தானே புலப்படும். ஆத்மஞானிக்குக் கருமமில்லையென்றதனால் தேகமே ஆத்மாவென்று நம்பியிருக்கும் அஜ்ஞானி தான் ஞானியாய்விட்டால் வேலையை விட்டுச் சோம்பித்திரியலாமென்று எண்ணுகிறான். இது மிகவும் தப்பான எண்ணம்.

நஹிகஸ்சித்க்ஷணமபிஜாது திஷ்டத்யகர்மக்ருத்
கார்யதேஹ்யவச: கர்மஸர்வ: ப்ரக்ருதிஜைர்குணை:.

ஒருகாலத்திலும் நிமிஷமாவது ஒருவனும் கருமம் செய்யாதிருக்கிறதில்லை. ஏனென்றால் பராதீனமாயிருக்கிற ஜனங்களெல்லோரும் சுபாவத்தி (ப்ரக்ருதியி)லிருந் துண்டான (ஆசை, துவேஷம் முதலிய) குணசம்பந்தத்தால் ஸ்வாதீனமற்றுக் கருமத்தைச்செய்கிறார்கள். அதாவது, பராதீனர்களாய்க் கருமங்க

ளைச்செய்யப் பலவந்தம் செய்யப்படுகிறார்களென்று ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொல்லியிருக்கிறார். ஏசுகிறிஸ்துவும் அப்படியே போதித்திருக்கிறார். ஜனங்கள் இப்படிப்பட்ட தப்பெண்ணத்தில் விழுந்து கெட்டுப்போவார்களென்றே பகவான் இதை அர்ச்சுனனுக்கு முன்னராக எடுத்துச்சொல்லி வற்புறுத்தியிருக்கிறார்:

நகர்மணுமநாரம்பாந் நைஷ்கர்ம்யம் புருஷோஸ்நுதே
நச ஸந்யஸநாதேவ ஸித்திம் ஸமதி கச்சதி.

"புருஷனானவன் கருமங்களுடைய அனுஷ்டான மில்லாமையால் ஞானத்தை அடைகிறதுமில்லை; கருமத்தைவிட்டு விடுவதனாலேயே மோக்ஷத்தை அடைகிறதுமில்லை." பகவானே இப்படிசொல்லியிருக்க, ஸ்வாமியையறிய, அதாவது, தன்னைத்தானறிந்த ஞானியாவதற்கு ஸந்நியாசம் அத்யாவசியகமென்று சொல்லியிருப்பது ஏனெனின், ஸந்நியாசம் என்றும் தியாகம் என்றும் சொல்லியிருப்பதன் அர்த்தம் வேறு. அவ்விருபதங்களும் ஒன்றையே குறிக்கின்றன. பகவத்கீதை 18-அத்யாயம் 11-வது சுலோகத்தில் ஸ்ரீ கிஷ்ணபகவான் இதன் கருத்தை நன்றாகவெளியிட்டுச் சொல்லியிருக்கிறார்: "தேகாபிமானமுடைய ஜீவன் கருமங்கள் முழுமையும் விடுவது அசாத்தியமாகும். எவன் கருமப்பயனை விட்டவனோ அவனே தியாகியெனப் படுகிறான்." இந்தச் சுலோகத்தின் கருத்தைத் தெளியவெடுத்துக் கூறியிருக்கும் பாஷ்யக்காரர்களில் ஸ்ரீதரஸ்வாமி "சகல கருமங்களின் பயன்களையும் விட்டவனே சிரேஷ்டமான தியாகியாவன். கருமங்களைவிட்டவன் தியாகியாகமாட்டான்" என்று சொல்லியிருக்கிறார். ஸ்ரீ இராமாநுஜரும் இந்தச் சுலோகத்துக்கு அவர்செய்திருக்கிற பாஷ்யத்தில் "கருமபலத்தியாகந்தான் தியாகமென்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது" என்றும், அடுத்த சுலோகத்துக்குச் செய்திருக்கும் வியாக்கியானத்தில் "கர்த்திருத்துவாதி பரித்தியாகமே ஸந்நியாசம்" என்றும் சொல்லியிருக்கிறார்.

நிஷ்காமமாய்க் கருமம்செய்கிறவன் சித்தசுத்தியையும், சித்தசுத்தியினால் ஞானத்தையும், ஞானத்தினால் மோக்ஷத்தையும் அடைகிறானென்று ஸ்ரீ சங்கரர் சொல்லியுள்ள வாக்கின் உண்மையை ஒவ்வொருவரும் அனுபவசித்தமாய் உள்ளபடி உணர்ந்தறிந்துகொள்ளலாமென்பது எமது திடமான துணிபு. இது நிற்க.

இப்பத்திரிகையை யாம் துவக்கிய காலத்து இதனால்ஒரு பிரதிப்பிரயோஜனத்தை யடைய வேண்டுமென்கிற எண்ணங்கொண்டு துவக்கினோமல்லேம். இடையில் எத்தனையோ கஷ்டநஷ்டங்கள்நேர்ந்தவிடத்தும் இச்சிந்தைக்கிடங்கொடுத்ததுமில்லை. எப்போதும் போல் இப்பொழுதும் எமது காலத்தையும் சக்தியையும் ஈசுவரன் கடாக்ஷித்துள்ள அளவு இதுவிஷயத்தில் விநியோகித்துவர யாம் சித்தமாயிருக்கிறோம். கைப்பொருள் செலவிட்டு நடத்திவரத் தக்க பாக்கியம் எமக்குக் கடவுள் அளிக்கவில்லையாதலின் அங்ஙனம் நடத்த இனி எம்மா லியலாதென்று எடுத்துக்கூற நாம் சிறிதும் சங்கோசப்படவில்லை. அலுப்புச் சலிப்புப்பாராமல் ஓய் வொழிவின்றிப் பலவருஷகாலம் உழைத்துவந்ததனால் எமது தேகசௌக்கியமும் மிகக்குறைந்திருக்கிறது. இப்பத்திரிகையை நடத்துவது எமக்கு ஒரு பெருங்காரியமன்று. ஆயினும் இதன் வரவுசெலவு கணக்குவைத்து லாபநஷ்டத்துக்கீடுபட்டுழைப்பதே மெத்த வாதனையா யிருக்கிறது. எமதுள்ளமுடைந்து தேகம் ஆரோக்கியம் கெட்டதற்குக் காரணமும் இந்த மனோவாதனையேயன்றி வேறன்று ஆகையால் இனி இப்பத்திரிகையின் லாபநஷ்ட பாத்யதையை யாம் மேலுக்கு முன்போற் பார்த்துவரினும் உண்மையில் அதனை எம்தலைப்பாரமாகவின்றித் தீர்த்துவிட நிச்சயித்துவிட்டோம். இப்பத்திரிகை துவக்கப்பட்டு ஒருவருஷ மிரண்டுவரு

ஷமில்லை, 9-வருஷங்களாகின்றன. இந்த 9-வருஷகாலத்தில் எத்தனையோ கஷ்டநஷ்டங்கள் நேரிடினும் ஒருமுறையாவது இரண்டு சஞ்சிகைகளைச் சேர்த்து ஒன்றாகப்பதிட்பித்ததில்லை. காலதாமதமானதும் நமது சந்தாதாரர்கள் குற்றத்தின்பயனேயன்றி வேறன்று. சந்தாத்தொகையை வருஷக்கணக்காகப் பாக்கிவைத்துக்கொண்டு கடைசியில் பத்திரிகையையும் கைவிட்டுப் பாக்கியையும்கொடாது அழும்பு செய்யும் பெரியோர் பலர்களின் தாக்ஷணியத்துக்குக் கட்டுப்பட்டதனால் உண்டான நஷ்டம் கொஞ்சமன்று. அப்படிப்பட்ட மஹான்களையெல்லாம் சென்ற வருஷத்தோடு தீரக்கழித்துத் தீர்த்தமாடிவிட்டோம். இத்தனை வருஷகாலமாக நமக்கு உற்றவிடத் துதவியாயிருந்து காலக்கிரமத்தில் அவரவர் சந்தாத்தொகையைச் செலுத்தி ஆதரித்துவந்த அன்பர்களுக்கும், விஷயங்களெழுதி யாதரித்தமேலோர்களுக்கும் ஹிருதயபூர்வகமாக யாம் வந்தனமளிக்கின்றோம். அப்படிப்பட்டவர்கள் அனேகர் போதுமான அளவுக்கிருக்கிறார்களென்கிற துணிவினாலேயே யாம் பட்டுள்ள கஷ்டநஷ்டங்களை நினைத்துப்பின்வாங்காது எப்போதும்போல் முன்னிருந்து நடத்தமுனைந்துள்ளோம். இதுவரையிற் பத்திரிகையை வாங்கியும், விஷயங்களெழுதியும் ஆதரித்துவந்த நண்பர்கள் எப்போதும்போற் குறைவின்றி அவரவர்களுக்கியன்றவாறு ஆதரவளித் துதவுவதோடு அவ்வாறே ஆதரித்துதவும்படி இதரர்களையும் தூண்டுவார்களென்று ஹிருதயபூர்வகமாய் வந்தனமளித்துக் கேட்டுக்கொள்கிறோம். அறிவைப்பரவச்செய்யும் உபாகாரசங்கங்களும், உபகாரிகளின் தொகையும், வெளிஜில்லாக்களில் இந்த வருஷம் அதிகவிசேஷமாய் விர்த்தியாகிப் பரவுமென்றெதிர்பார்க்கிறோம்.

---

TRUE KNOWLEDGE.

## மெய்யறிவு.

அறிவு இருவகைத்தாய்ச் சிற்றறிவு, பேரறிவு எனப் பெரியோரால் பகுத்துச் சொல்லப்படும். நலந் தீதென்னும் பேதம் பாராட்டித் தீமையைவிலக்கி நன்மையை நாடியுணரும் அறிவு சிற்றறிவாகும். நலமென்றும் தீதென்றும் பாராமல் எல்லாவற்றையும் உத்தமமாகப் பாவித்து உலகத்தில் உள்ளதெல்லாம் ஒன்றே: மற்றப்படி காணப்படுந் தோற்றங்களெல்லாம் அவ்வொன்றின் விகாரமேயன்றி வேறில்லையென்று எதையும் அபேதமாய் அறியும் அறிவு பேரறிவாகும். சிற்றறிவு க்ஷணத்துக்கு க்ஷணம் மாறிக்கொண்டிருக்கும் நாமரூபப்சப்தமாத்திரமாயிருக்கும்; இந்த ஜகத்தில் நிலையின்றி மாறிவரும் அற்பசுகத்தைக் கொடுக்கும். இப்படிப்பட்ட அற்பசுகம் அனுபவிக்க யோக்கியமானதன்று. ஏனெனிற் சுகம் என்பதுள்ள விடத்திலெல்லாம் துக்கமும் கூடவே மற்றொரு பக்கத்தில் மறைந்திருக்கிறது. இருபுறம்பெற்ற ஒரு காசில் ஒருபக்கம் தலையும் ஒரு பக்கம் வாலுமாயிருப்பதுபோல், சிற்றின்பமென்று வழங்கிவரும் காசுக்குச் சுகமும் துக்கமும் இருபக்கங்களாக விருக்கின்றன. இவற்றில் ஒன்றைத்தள்ளி ஒன்றைக் கிரகிப்பது அசாத்தியம். காசின் ஒரு பக்கத்தைக் கீழே திருப்பி மற்றொருபக்கத்தை மேலேவைத்துப் பார்ப்பதனால் அந்தப்பக்கத்தை யெப்படித் தள்ளினதாக எண்ணுதல் முடியாதோ அப்படியே சுகம் துக்கம் என்னும் இரண்டனுள் ஒன்றைத்தள்ளி ஒன்றைக் கிரகிப்பது கூடாமையாக விருக்கிறது. தள்ளின் இரண்டையுந் தள்ளிவிடவேண்டுமேயன்றி ஒன்றை வைத்துக்கொண்டு ஒன்றைத்தள்ளுவது கூடாமை. செல்வம் சகடக்கால்போல் உருண்டுகொண்டே யிருக்கிறது உண்மைபோல், ஜகமும் சலநத்தினாலேயே உண்டாகி வளர்ந்து அழிந்துவருகிறது. ஒரு நதியிலுள்ள

ஜலம் கரையிலிருந்து பார்ப்பவனுக்கு ஓரே விதமாகத் தோற்றினாலும் அவன் கண்ணுக் குப்படும் ஜலத்துளிகள் நிமிஷத்துக்கு நிமிஷம் மாறிக்கொண்டேயிருக்கின்றன. ஜல ஓட்டம் நின்றால் நதியென்கிற பெயர் அதற்குப் பொருந்தாது. நதியாக ஓடுகிற ஜலம் சமுத்திரத்திற்போய்க் கலந்தபிறகு நதியென்கிற நாமரூபமழிந்து சமுத்திரத்தோடு சமுத்திரமாகக் கலந்துபோவதுபோல, இந்த ஜகமும் நதியைப்போல் ஓயாது சலித்து ஓடிக்கொண்டுபோய் முடிவில் ஸத்தியமாகிற சமுத்திரத்திற்கலந்து அசைவற்று அகண்டைக ஐக்கியமாகி என்றுமழியா ஆநந்தஸ்வரூபமாகப் பிரகாசித்து விளங்குகிறது. இந்த ஜகமாகிய நதிக்கு மனிதனாகிய ஜீவன் சங்கமுகம் (சமுத்திரத்திற் கலக்கும் பாகம்) ஆகிறான். நதியும் சமுத்திரமும் ஒன்றாய்க்கலப்பது ஜீவேசுவர ஐக்கியமென்னும் முக்தி அல்லது மோக்ஷநிலையாம். நதிகள் சமுத்திரத்திற் கலக்குமிடம் விசேஷமெனக்கருதி, ஜனங்கள் லக்ஷம்கோடிக் கணக்காய் அங்கு சென்று ஸ்நானம் செய்வது இந்த எண்ணத்தைக்கொண்டேயாம். நதி சமுத்திரத்தில்விழுந்து கலந்து ஒன்றாகி என்று மழியாத பூரண நிலையடைவதுபோல், ஜீவன் தானும் பரப்ரம்மம் அல்லது பரமபிதாவாகிய மூலப்பொருளோடு ஐக்கியமாய் மோக்ஷசாம்பிராஜ்யத்தை யடையவேண்டுமென்று நினைத்து, அந்நினைவு உறுதிப்பட்டுத் தடித்துப் வலனை யளிக்கும்பொருட்டுச் சங்கமுகஸ்நானம் செய்கிறான். உள்ளதெல்லாமொடுங்க ஐந்து லக்ஷணங்களில் இருப்பதையெல்லாம் எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள்.

அஸ்தி பாதி பிரியம் நாமரூபஞ்சேத்யம்ச பஞ்சகம்
ஆத்யத்ரயம் பிரம்மரூபம் ஜகத்ரூபம் ததோத்வயம்.

சத், சித், ஆனந்தம், நாமம், ரூபம், இந்த ஐந்தில் எல்லா மடங்கிவிட்டது. சத், சித், ஆனந்தம், இம்மூன்றும் கடவுளின் ஸ்வரூபம், அதாவது ஸத்திய நித்திய சாசுவதப் பொருளாயிருப்பது. சத் என்பது இருத்தல், அதாவது, அசைவற்று அழியாதிருத்தல்; சித் என்றால் அறிவு, அதாவது, அழியாது மாறாது எல்லாம் தன்னிலடங்கிய பூர்ணஞானம் அல்லது பேரறிவாம். ஆனந்தம் என்பது அனுபவ ஸ்வபாவமாம். அதாவது அழிவற்றதாய் என்றும் மாறாததாயிருக்கும் சுககனமான தன்மையாம். சுகம் துக்கமென்கிற பேதமற்று அகண்டைக ஆனந்தமாயிருத்தலே இந்நிலையான சுகமாம். இதைத்தான் பேரின்பம் என்று சொல்வார்கள். இப்படியின்றி, நாமரூபத்தோடு கூடியிருப்பதெல்லாம் ஜகமாம். இது நிலையற்றது, அழிவுள்ளது. சலனமே ஸ்வபாவமாகவுடையது. இந்த ஜகத்தை யண்டமாகவெடுத்துச் சொன்னால், மனிதனைப் பிண்டமாக எடுத்துச் சொல்வார்கள். அண்டத்திலுள்ளதெல்லாம் பிண்டத்திலடக்கமாம். பிண்டத்திலுள்ளதே அண்டத்தில் விரிவாம். அண்டத்தில் சதா சலித்துக்கொண்டிருக்கும் வஸ்து ஆகாசமாம். பிண்டத்தில் சதாசலித்துக்கொண்டிருப்பது மனமாம். மனமும் மாருதமும் (காற்றும்) ஒன்றாம். எனின், மனம் சலன்ஸ்வபாவமுள்ளதென்றருத்தமாம். சலனமற்றால் மனமும் அற்றது. மனத்தின் சலனமாவது நினைவாகும். நினைவற்றவிடத்து, அஃதாவது, மனம் அசைவற்று நின்றவிடத்து மனிதன் அகண்டாகார ஸ்வரூபியாகிறான், அதாவது ஏகமாய் ஸர்வாந்தர்யாமியாயிருக்கும் பரம்பொருளோடு ஐக்கியமாகி சமுத்திரத்தைச்சேர்ந்த நதிபோல அப்பரம்பொருளே யாகிறான். இந்தப் பதவியடைவதுதான் முக்தியென்றும், மோக்ஷமென்றும் சொல்லப்படுகிறது. யேசு கிறிஸ்து தான் பரமபிதாவோடு ஐக்கியமாகி அவரோடு ஒன்றாய்விடுவதாகச் சொன்னதும் இதுவேயாம். இந்த ஜகத்தில் ஒருவனுக்குச் சாத்தியமானது எல்லாருக்கும் ஸாத்தியமாகக்கூடியதே. ஆனால் கோடானுகோடி ஜனங்கள் ஏன் சாத்தியப்படாமல் அஜ்ஞானிகளாய் அவஸ்தைப்படுகிறார்களென்றால், சாதன சதுஷ்டய சம்பத்தியில்லாமையாலென்க. சாதனசதுஷ்டயம் கைகூடிவருவ

தைத்தான் ஞானோதயமென்றும், பரிபக்குவ மென்றும், கிறிஸ்து உதயமாதலென்றும் பல விதமாகச் சொல்லுகிறார்கள். தேடும் முறை யறிந்து தேடினால் தேடும்பொருள் தானேவந் தமைகிறதென்பது மஹான்கள் எல்லாரும் எந்த ஜாதி மதத்தவராயினும் தங்கள் ஸ்வா னுபவத்திலிருந்து கண்டு உலகுய்யப் போ தித்திருக்கிறார்கள். இதை யனுபவசித்தமா யுணர்ந்தறிய வழியறியாத வம்பர்கள் 'என்னு தெய்வம்' 'உன் தெய்வ' மென்றும், 'எம் மதம்,' 'உம்மத' மென்றும் சொல்லி வீண் வாதம்பேசி உலகுக் குண்மையைப் போதிக் கவந்த பெரியோர்களின் பெயரைச் சொல்லிக்கொண்டு அவர்கள் கனவிலும் நன விலும் செய்ப வினைத்தறியாத கொடுமை களைச்செய்து, குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொண்டவன் கதையாக நல்லபதவியைத் தேடுகிறோமென்று வீணாக வினையைப்பெருக் கித் தங்களுக்கே வருத்தத்தை யுண்டுபண் ணிக்கொள்கிறார்கள். ஆகையால் உண்மை யுணர்தல் எல்லார்க்கும் அவசியமாம். இகம் பரம் இரண்டிற்கும் சாதகமாம். இதன் முக் கியத்தையுணர்ந்தே, பிறவிஞானியாகிய திரு வள்ளுவநாயனார் "மெய்யுணர்தல்" என்பதை யொரு அதிகாரமாகவைத்து 10-க்குறளடி யில் அதன் தன்மையை யுணர்த்தியுள்ளார். அவர் மெய்ப்பொருள் பொய்ப்பொருள்களைப் பகுத்தறியும் 'ஆத்மாநந்த' விவேகமே மெய் யுணர்வாகுமென்றும் அப்படி யுணரும் அறி வின்மையால் உண்டாகும் மயக்கத்தினாலே பிறவித்துன்பம்நேரிடுகிறதென்றும் சொல்லி,

"ஐயத்தினீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானநணிய துடைத்து".

மெய்ப்பொருள் பொய்ப்பொருளைப் பிரித் தறிய வுணராதுழலும் சந்தேகத்திலிருந்து நீங்கி மெய்யுணர்வில் தெளிந்தவர்க்கு இக மாகிய இந்நிலவுலகத்தைவிடப் பரமாகிய முத் தியுலகம் அடைந்ததையீயாக்கும்; அதாவது மிகச்சமீபமாம் என்று சொல்லியிருக்கிறார்.

"எப்பொருள் எத்தன்மைத்தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்பதறிவு."

எந்தப்பொருளிடத்தும் உண்மைப் பொருளை யறிவதே அறிவு என்று சொல்லி யிருக்கிறார். அதாவது எந்தப்பொருள் எப்ப டித்தோற்றினும் அந்தத் தோற்றப்பார்வை யைத் தள்ளி அதனுள் பொதிந்துகிடக்கும் உண்மைப்பொருளை அதாவது அழியாத தத் துவத்தை யறிவதே உண்மையில் அறிவு என்று சொல்லப்படும். மற்றப்படி யறியும் அறிவு போலியறிவேயாம் என்பது அவர் கருத்து. இதற்குச்சாதனம் "அவாவறுத்தல்" என்று சொல்லி யடுத்த அதிகாரத்தில் அதனை எடுத் துச்சொல்கிறார்.

அவாவறுத்தல், அதாவது ஆசையைவிடுத் தலின் முக்கியத்தையும் அவசியத்தையும் வற் புறுத்திக்கூறி, அப்படி ஆசையைவிட்டொழிப் பதனால்வரும் பயனைப் பின்வரும் குறள்களி லெடுத்துச் சொல்லுகிறார்:—

"இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங்கெடின்."

துன்பத்துக்கெல்லாங் காரணமாகிய ஆசை கெடின், மோக்ஷபலனாகிய இன்பத்தை இவ்வு டம்போடு கூடியிருக்கையிலேதொட்டு நீங் காது அனுபவிக்கலாமென்று சொல்லுகிறார்.

"ஆராவியற்கையவா நீப்பினந்நிலையே
பேராவியற்கை தரும்."

ஒருபோதும் நிரம்பாத இயற்கையையுடைய ஆசையை நீக்கினால், எப்போதும் ஒருநிலையா கவிருக்கும் பேரானந்தம் அப்போதே சித்திக் கும் என்பது பொருள். இப்படிப்பட்ட மெய் யுணர்வாகிய அறிவையே அவர் அறிவு என்று சொல்வதன்றி மற்றப்படி பேதபுத்தியினாலுண் டாகும் அறிவையன்றென்று வற்புறுத்துமாறு "அறிவுடைமை"யென்னு மதிகாரத்தில்,

"எப்பொருள்யரர் யார்வாய்க்கேட்பினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்பதறிவு"

என்று சொல்லியிருக்கிறார். தோற்றத்தைத் தள்ளி உண்மையை யறிவதே மெய்யுணர்வு என்றார் முன்னர். இப்பொழுது சப்தத்தையுந் தள்ளி உண்மைப்பொருளையுணர்வதே அறிவு எனத்தகும் என்றார். முதல் 5-பாட்டுகளில் அறிவுடைமையின் இலக்ஷணம்கூறி இப்படிப் பட்ட அறிவுடையோரின் இலக்ஷணமும் பின்னர் உரைக்கின்றார் :—

"அறிவுடையார் ஆவதறிவார் அறிவிலார்
அஃதறிகல்லாதவர்."

வரக்கடவீதை முன்னறிய வல்லவர் அறிவுடையராவர். அப்படிமுன்னறியமாட்டாதவர் உண்மையறிவில்லாதவராவர் என்று சொன்னார்.

"அஞ்சுவதஞ்சாமை பேதைமையஞ்சுவ
தஞ்சலறிவார் தொழில்."

அப்படிப்பட்ட அறிவுடையோர் அஞ்சத்தக்கவைகளுக்கு அஞ்சுவர்; அப்படி அஞ்சாமை பேதைமையாகுமென்றார். இதனால் அறிவுடையார் பழிபாவத்துக்கஞ்சி நடப்பரென்று சொல்லப்பட்டது. வரப்போகு மவற்றை முன்னறிந்துகொள்ளும் சக்தியுள்ள அறிவுடையார்க்குத் திடீரென்று நடுங்கும்படியான துன்பம் எப்படி வரும்? வாராதென்பதைப் பின்வரும் குறளிற் சொல்லுகிறார் :

"எதிரதாக்காக்கு மறிவினார்க்கில்லை
யதிரவருவதோர் நோய்."

வருந்துன்பங்களை முன்னறிந்துகாக்கும் விவேகமுடையவர்களுக்கு அவர் நடுங்கும்படி வரும் துன்பமில்லையென்பதாம். இஃது உண்மையேயன்றோ? ஆகையால் இப்படிப்பட்ட விவேகமுடையவர் வேறொன்றுமில்லாதவராயினும் எல்லாமுடையவரே யாவர். ஏனெனின் நோயற்றவாழ்வும் குறைவற்றசெல்வமும் எப்போதும் அவரிடத்தேயிருப்பதனால் இந்த விவேகமில்லாத மற்றவர்கள் உலகத்திலுள்ள ஸர்வசம்பத்துமுடையரேயாயினும் ஒன்றுமில்லாதவருக்கு ஒப்பாவரென்பது சொல்லாமலே விளங்கும். இந்த உண்மையை விளக்கும் குறளடியே இவ்விவேகசிந்தாமணிக்கு வழிகாட்டியாகும் தீபஸ்தம்பம்போல் முதலிலிருந்து விளங்கிவருகிறது. அத்தூங்காவிளக்கின் ஒளியைக்கொண்டே யாமும் இதுகாறும் பாங்காக உழைத்துவந்தோம். உண்மையான அதன் பிரகாசத்தை இதனை வாசிப்போர்க்கு உள்ளபடி விளக்கக் கடவுள் அருள் சுரந்து பூரண கிருபை பாலித்தருள்வாரென்று நம்புகிறோம். நம்பியே இப்பத்திரிகையை நடத்திவருவதிலுற்ற இடுக்கண்யாவற்றையும் பொருள் செய்யாது "ஸத்தியமே ஜயம்" என்னும் வாக்கில் உண்மையான பூர்ண நம்பிக்கையோடு மேலுழைத்துவரத் திடனுற்றோம். இந்தக்கருமத்தில் ஆண்டவனருளால் வேண்டிய சகாயமெல்லாம் கிடைக்குமென்னுந் துணிபே எமக்குத் தைரியத்தைக்கொடுக்கிறது. ஆகையால் இன்னமும் இப்பத்திரிகை தாமதித்தே வெளிவரினும் அதன்பொருட்டுப் பின்வாங்காமல் காலக்கிரமத்தில் எல்லாம் ஒத்துவர இடையூறெல்லாம் அற்றுப்போமென்னும் நம்பிக்கையால் உற்சாகங்கொண்டு உழைத்துவரத் தீர்மானித்தோம். "ஓம் தத்ஸத்," "ஸத்தியமே ஜயம்."

"அறிவுடையாரெல்லாமுடையாரறிவிலா
ரென்னுடையரேனுமிலர்."

## * "ஏகம் ஸத்தியம் ப்ரஹ்ம."—GOD AS TRUTH.

"அஹம்ப்ரஹ்மாஸ்மி."

†கண்டேன் கண்டதைக் கண்டபடி நானுரைத்தால்
காணாதைக் கட்டியழும் கண்கெட்ட குருடரெல்லாம்
பேயென்றும் பித்தென்றும் பரிகாசம் செய்கிறார்கள்
பேயென்றாலென்ன பித்தென்றாலென்ன பரம்பொருளெல்லா மொன்றுதானே.

—பாயாண்டிச்சித்தன்.

### "எப்படியிருந்தாலென்."

இராகம் - கல்யாணி.

பல்லவி.

எப்படி யிருந்தாலென்—எனக்கினி
எப்படியிருந்தாலென்.

அநுபல்லவி.

அப்படி யிப்படி ஆனந்தப்படி
சொப்பிரகாசமான சுகமகமான பின் (எப்படி)

சரணங்கள்.

1. நாடியே துதித்தாலும் அனைவரும் நாப்பியே பழித்தாலும்
தேடியபொருள்தன்னில் நாடியேமனம் உறைத்
தாடிய கூத்தமர்ந்த்' அசங்கோகமானபின் (எப்படி)

2. ஆறுவிகாரமற்றேன் அறிவென்னும்சொரூபமொத்தனுபவித்தேன்,
சீறியஅகம்புத்தி சீதளமானபின்
சோதிர் மயமான சுகமகமானபின் (எப்படி)

3. தன்னிலேயடக்கமென்றே தடஸ்தமாய் தன்மயமாகிநின்றேன்
பொன்னுக்குள்பணியது பிரிந்தாற்போலவே
சின்மயமாயெங்கும் சேஷித்து நின்றபின் (எப்படி)

—ஆவடையாரம்மாள்.

தானான தன்மயமேயல்லா லொன்றைத் தலையெடுக்கவொட்டாது தலைப்பட்டாங்கே
போனாலும் சர்ப்பூரதீபம்போலப் போயொளிப்ப தல்லாது புலப்வேறின்றும்
‡ ஞானாகாரத்தினொடு ஞேயமற்ற ஞாதுருவுநழுவாமனழுவி நிற்தும்
ஆனாலுமிதன்பெருமை யெவர்க்கார் சொல்வார் அதுவான லதுவாவ ரிதுவேசொல்லும்.
அது வென்றலேது வெனவொன்றடுக்குஞ் சங்கை யாதலினா லதுவெனவுமறவேவிட்டு
மதுவுண்டவண் டெனவுஞ் சநகனாதி மன்னவர்கள் சுகர்முதலோர் வாழ்ந்தாரென்னும்
பதியிந்தநிலையெனவு மென்னையாண்ட படிக்குநிருவிகற்பத்தாற்பரமானந்தக்
கதிகண்டுகொள்ளவு நின்னருள்கூர்இந்தக் கதியன்றி யுறங்கேன் மேற்கருபம்பாரேன்.

—தாயுமானவர்.

* இது சுருதிவாக்கியம், "அது ஒன்றே: என்று மழியாதது; ஸர்வவியாபகமானது அல்லது எங்கும் பரவி யுள்ளது" என்பது இதன் பொருள். அது என்பது ஸத்திய நித்திய பரம்பொருளான கடவுளைக் குறிக்கின்றது. யேசு

## உண்மையான தைரியம்.

பெரியோர் பிடித்தகாரியத்தைக் கைவிடார். தேவர்கள் சமுத்திரத்தைக் கடைந்தபோது, இரத்தினங்களைக் கண்டதும் சந்தோஷமடையவுமில்லை. பயங்கரமான விஷம் கிடைத்ததும் பயப்படவுமில்லை. அமிருதம் அகப்படுமளவும் அவர் முயற்சி தளரவுமில்லை. இடையூறுவருமென்று எத்தொழிலிலும் ஏற்படார் அற்பர். ஓர் காரியத்தைக் கைக்கொண்டு விக்கினம் வருமளவில் பின்வாங்குவோர் அவரிலும் சிறந்தவர். தலையிட்ட காரியத்தை, தடைகள் அடிக்கொன்று இருப்பினும், சலியாது சாதிப்பவர் சான்றோர். ஒரு காலத்தில் தரையில் படுத்து உறங்குவார்; ஒருகாலத்தில் மிருதுவான சயனங்களில் நித்திரை போவார். ஒருவேளை காய்கனிகளைப் புசித்திருப்பார்; ஒருவேளை உத்தம உருசியுள்ள உணவுகள் உண்பார். ஓரிடத்தில் கந்தைகளை உடுப்பார்; ஓரிடத்தில் பட்டாடைகள் தரிப்பார். இவ்வாறு, சுகதுக்கம் பாரார் கருமமே கண்ணாயினர். அவர்களை உலகத்தார் தூஷித்தாலும் ஒன்றே, பூஷித்தாலும் ஒன்றே; சம்பத்து வந்தாலும் ஒன்றே, வாராது தன்வழி சென்றாலும் ஒன்றே. மரணம் இன்றைக்கெனினும் ஒன்றே; இனி ஓர் யுகமளவும் இல்லையெனினும் ஒன்றே. நியாய நெறியைவிட்டு அணுவளவேனும் தவறார் தீரர்கள்.

எவர் மனத்தை மங்கையரின் கடைவிழிகள் சேதிக்கவில்லையோ, கோபமென்ற அக்கினி தபிக்கவில்லையோ, இந்திரிய சுகங்களும் ஆசையென்ற பாசங்களும் இழுக்கவில்லையோ, அவரே முவ்வுலகையும் வென்ற வீரர். தைரியகுணமுடையோருக்கு அவமானம் வந்தாலும், அக்குணத்தை அழிக்கச் சாத்தியமில்லை. அக்கினியைத் தலைகீழாகப் பிடித்தாலும் அதன் சுவாலை கீழ்நோக்குமா?

உயர்ந்த மலையின் முடியிலிருந்து விழுந்து பிராணனை விட்டாலும் விடலாம், கொடும் விஷமுள்ள சர்ப்பத்தின் வாயிற் கையைவைத்தாலும் வைக்கலாம், அக்கினியிற் புகினும் புகலாம், நல்லொழுக்கமொன்றை மாத்திரம் கைவிடலாகாது.

உலகில் யாவரும் கொண்டாடும் குணமுடையோனுக்கு நெருப்பும் நீராகும், கடலும் கணப்பொழுதிற் கால்வாயாகும், மேருமலையும் சிறுகல்லாகும், மிருகராசனும் உடனே மான்போல் நிற்பான், நாகமும் அணியு மாலையாகும், விஷமும் அமிருத மழையாகும்.

ஒடிந்த மரம் துளிர்ப்பதையும், குறைந்த சந்திரன் நிறைவதையும் ஆலோசித்து, தம்

கிறிஸ்துவானவர் 'நம் பரமபிதா' 'Our Father which art in Heaven' என்றும், நமது ரிஷிகள் வேதத்தில் 'தேயுர்ப்பிதா:' வென்றும் துதித்திருப்பது அந்த ஒன்றையே அன்றி வேறல்ல.

* Compare also Isaiah LXV 16, where "the God *Amen*" has been translated "the God of Truth". The word *Amen* in Hebrew meaning 'true,' 'certain' occurs as the last and concluding word in the Lord's Prayer framed by *Jesus Christ*. It may be taken to convey the same idea as *Sat* in Sanskrit does. '*Om Tat Sat*' is often repeated at the end of a prayer in Sanskrit as *Amen* is by Christ.

† Cf. Browning's lines :—" . . . . . I spoke as I saw.
I report as a man may of God's work—*all's Love, Yet all's Law.*
Now I lay down the judgeship he lent me. Each faculty tasked
To perceive Him, has gained an abyss where a dewdrop was asked."

‡ ஞானம், ஞேயம், ஞாதுரு என்பவற்றைத் 'திரிபுடி' யென்பார்கள். இது, அறிவு, அறியப்படும் பொருள், அறிபவன் ஆகிய மூன்றைக்குறிக்கும். இம்மூன்றையும் தள்ளி மிஞ்சினது தன்மயமாய் விளங்குமென்பர். "த்ரிஷ்டதர்சனதர்சியனி த்யக்த்வா வாஸநாஸஹ, தர்சநப்ரதமாபாஸ மாத்மாநம் கேவலம்பஜ" என்பது சுருதிவாக்கியம். 'பார்க்கிறவன், பார்வை, பார்க்கப்படுகிறவஸ்து இவைகளை வாசனையுடன் தள்ளிவிட்டு விளங்குகிற சிரேஷ்டமான ஆத்மாவை பஜி' என்பது இதன் பொருள்.

மினத்தார் துயரப்படும்போது, பெரியோர் தளர்ச்சிக்கு இடங்கொடார்.

ஐசுவரியத்துக்கு அழகு நற்குணம். சூரனுக்கழகு வாயடக்கம், ஞானிக்கு அழகு சாந்தம், தபசிக்கழகு கோபமின்மை, வித்தைக்கு அழகு வணக்கமுடைமை, பிரபுவுக்கழகு பொறுமை, தருமத்துக்கழகு டம்பமின்மை, பணத்துக்கு அழகு கொடை.

இவையனைவற்றிற்கும் காரணமாயுள்ள நல்லொழுக்கமே எல்லோர்க்கும் அழகு.

அ. ஸ்ரீனிவாஸ ஐயர், பி. ஏ.

## THE SPIDER AND THE FLY.

## சிலம்பியும் ஈயும்.

[இஃது ஆங்கிலேய பாஷையிலுள்ள ஒரு சிறுகவி. மிஸ் ஹோவிட் என்னும் ஒரு மாது சிரோமணியாற் பாடப்பட்டது. பின்வரும் தமிழ்ப்பா இதன் மொழிபெயர்ப்பு. ஒரு சிலம்பியானது தன் சாதுரியத்தால் சில இச்சகமொழிகளைக் கூறி ஓர் ஈயைத் தன் வலைக்குள் அகப்படுத்திக் கொன்று தின்றது என்பது இதிற் கூறப்பட்டுள்ள விஷயம்.]

"அன்ப! வந்தனம்! அறைமொழி கேளாய்
என்னறை யுள்ளே யெழுந்தருள் வாயோ?
என்றுநீ காணு (1)வெழிற்சிற் றறையது.
அவ்வறை யின்வழி யஞ்சுழற் படியால்
ஆங்குநீ யுனக்கே அதிசயப் பண்டம்
பாங்காய்க் காட்டப் பலவுண் டாமால்".
என்றோர் சிலம்பி யீயினுக் கியம்ப
"மாட்டேன்! மாட்டேன்! மாண்புறு நண்ப!
கேட்டல் வீணே"னக் (2)கிளர்ந்ததவ் வீயும்.
"உன்சுழற் படிவழி யுயரஞ் செல்பவ
ரென்றுந் திரும்பல் வியலா தவரே."

II.

"உன்னத மிகவே யோங்கிப் பறத்தலின்
அன்ப! திண்ணம் அயர்ச்சிநீ யுற்றனை
என்சிறு (3)சேக்கைமீ திளைப்பா றுவையோ?
அழகுறுந் திரைக ளவ்விட முண்டால்
இழைமெல் விரிப்புக ளெழில்பெற விளங்கும்.
சிறிதிளைப் பாறச் சிந்தைநீ விரும்பிற்

(1)எழில்=அழகு. (2)கிளத்தல்=சொல்லல். (3)சேக்கை=படுக்கை.

சுகமா யுன்னைச் சுருட்டியுள் வைப்பேன்"
எனவச் சிலம்பி யீமாட் டியம்ப
"மாட்டேன்! மாட்டேன்! மனமுறுந் தோழ!
கேட்டிருக் கின்றேன் கிளக்கப் பல்லோர்
உன்றன் சேக்கைமீ துறங்கா நிற்போர்
ஒன்றுந் திரும்ப வெழுத லிலரே"
என்றே வச்சிற் றீயியம் பிற்றால்.

III.

"ஆருயிர் நண்ப! அகநா னுணர்ந்த
போன் பைத்தான் (1)பிறங்கக் காட்ட
யானென் செய்வ லென்னக முள்ள
பண்ட சாலையுட் பல்நயப் பொருள்களுட்
சண்டநல் லனவெலாங் கருத்தாய்ச் சேர்த்தேன்.
இன்புட னீவர வேதுந் தடையிலை
யன்பாய்ப் போந்தே (2)யயிலுதி சிறிதென"
வஞ்சனைச் சிலம்பி வழங்கவீ யினுக்கே.
"மாட்டேன்! மாட்டேன்! மனத்திற் பொருந்திய
அன்புடை யைய! அதுநட வாது.
உன்(3)பண் டாரத் துள்ளவை கேட்டேன்
ஒன்றும் பார்க்க வுடன்படேன் யானே."
என்று மொழிந்ததவ் விளவீ தானே.

IV.

"இன்சொற் பிராணி! யியம்பக் கேணீ
நீசொற் சதுரன் நீமதி யூகி
உன்மென் சிறைகள் ஒண்(4)வனப் புற்றன
உன்றன் கண்கள் ஒளிமிக் குடையன.
என்ற னறையி னெழிற் றட்டின்மே"
லுன்முகம் பார்க்க வுளதுசிற் (5)றாடி
ஒருநொடிப் போழ்துநீ யுள்ளடி வைப்பினின்
னுருக்காண் பாயென வுரைத்ததச் சிலம்பி
"மென்குணத் தைய!" (6)மிழற்றின தவ்வீ
"நின்குண மொழிக்கு நிகழ்த்தினன் வந்தனம்.
காலை வந்தனங் கழறிப் போகுவல்
மேலை நாள் வந்து மேவுவ னின்பால்"

(1)விளங்க. (2)அயிலல்=உண்ணல். (3)பண்டாரம்=பண்டகசாலை.
(4)வனப்பு=அழகு. (5)ஆடி=கண்ணாடி. (6)சொல்லிற்று.

V.

சிலம்பியுக் திருப்பிச் சேர்ந்தது தன்(1)னில்
(2)புலமில் வீயும் பொள்ளென மீளுமென்
றதுநன் காக வறியு மாதலால்.
நுண்வலை யுபாயமாய் நூற்றதோர் மூலையில்
உண்கல மமைத்த துண்ணுவா னீயைப்
பின்பது வாயிற் பேர்ந்து வந்தே
இன்புறப் பாடற் றிசைத்திக ழிப்பண்.
"இங்ஙனிங் ஙன்வா எழிலீ யேயுன்றன்
சங்க முத்து(3)வெண் சார்பொற் சிறையோடு
உன்றன் போர்வைதா னூதாப் பச்சையே
ஊன்றன் முடியின்மீ துண்டோர் சூடிகை
உன்றன் கண்களும் ஒளிரும் வைரம்போல்
என்றன் கண்களோ ஈயநேர் மங்கல்."

VI.

அந்தோ! அந்தோ! அவலச் சிற்றீ
தந்திர நயமொழி தன் செவிக்கொண்டு
வந்தது கடுக வழியிற் றங்கிப்
பச்சையூ தாநிறம் பரப்பொளிக் கண்கள்
உச்சிக் கொண்டையுன்னி யிவை யெலாம்
அரற்றுஞ் சிறகா ணந்தர நின்று
வூரத்தொடங் கிற்றால் வரவர (4)வணித்தே.
தந்திரச் சிலம்பி தாவிப் பாய்ந்தது.
அந்தத் தில்லை (5)யலமரப் பற்றிச்
சிற்றறை சேர்தன் செவ்விருட் கூண்டுட்
சுற்றுப் படிமீ துறவிழுத் ததுவே.
ஐயோ! பேதையீ! அதுமீண் டிலையே.

VII.

இக்கதை கற்கு மெம்மரு மிளையீர்!
தக்கதோர் புந்தி தழுவக் கூறுவல்
(6)மடியொடு (7)மடஞ்சார் மகிழ்வஞ் சகமொழி

(1)இல்=வீடு. (2)புலம்=அறிவு. (3)வெண்சார்=பொன்வெள்ளி. (4)அணித்து=சமீபத்தில்.
(5)அலமரல்=நடுங்கல். (6)மடி=சோம்பல். (7)மடம்=அறியாமை.

கடிமின் கேடு கழறு வோர்க்கே
(1)கவியுமின் மனனுங் காதுங் கண்ணுஞ்
சிலம்பி யீயின் சிறுகதை யிதனல்
நலந்திகழ் ஞான நன்குணர் வீரே.

எஸ். ஸ்வாமிநாதையர்,

SHORT STORY.

## அரங்கசாமி.

அஃது ஓர் அழகிய கிராமம். நாமிந்தச் சிறு கதை எழுதத்தொடங்கும் சமயம் காலை நேரம். பொன்னிறமான அழகிய கிரணங்களால் கதிர்வன் வீட்டுச் சாளரவாயில்களில் பிரகாசித்தான். எங்குக் கண்டாலும் உருக்கியோடவிட்ட பொன்னீர்போல்வ, தகத்தாயமாயிருந்தது. சிறுகுயில்கள் தம்தீங்குரலாற் சப்தித்துக்கொண்டு சென்றன. காகங்கள் கரைந்தன. சேவல்கள் "பறையறைவிப்பவன் எச்சரிக்கை செய்வான்போல்" காலைநேரமான குறிப்பைக் கூவிச் சூசிப்பித்தன. சிறு தென்றல் இனிமையாய் வீசிற்று. அவ்வூருக்கருகி விராகின்ற, ஒரு கூரைக்கட்டிடத்தின் வாயிலில் ஒருவர் நின்றுகொண்டிருந்தார். அவர் அவ்வூர் பள்ளிக்கூடத் தலைவர். தன் பிள்ளைகள் காலமே கட்டமுதுண்டுவிட்டு எல்லாரும் சரியாய் வந்துவிட்டார்களா எனப்பார்ப்பான் பொருட்டு வந்து, நரசிம்மய்யரின் இரண்டாவது குமாரன் அரங்கசாமி யென்பவன் பள்ளிக்கு வாராததனல் ஒரு பையனை ஏவி அவனை யழைத்து வருமாறு அனுப்பிவிட்டுத் தான் நின்றுகொண்டிருந்தார். இது நிற்க, நரசிம்மய்யர் யாரெனவும், அவர் பூர்வ சரிதை 'யாதென்றும்' சிறிது கவனிப்போம்.

நரசிம்மய்யரென்பவர் பொருமையும், அண்டிக்குடிகெடுக்கும் அரிய குணமும், பொய், வஞ்சனை, முதலியன ஒருங்கே உடன் பிறந்தாற்போல, கைக்கொண்ட ஒழுக்கமும் குடிகொண்டவராதலால் அவரைக்காணுந் தோறும் அனைவருக்கும் அருவருப்பையூட்டி வந்தது. அவர்க்கு இருபுத்திரர்கள். மூத்தவனை பி. ஏ. வரைக்கும் படிப்புச் சொல்லிக் கொடுக்க, அவனது மாமனர் தம்மோடு அழைத்துப்போய்விட்டார். இளையவனுக்கு விவாஹ மில்லாததினுலும் அவ்வூரிலேயே பள்ளிக்கூடமிருந்ததாலும், விவசாயம் அங்கேயே பார்க்கவேண்டியதாயிருந்ததாலும், அங்கேயே வாசம் பண்ணநேரிட்டது. அவருக்கு மூத்தபிள்ளையின்மேல் பிரியமும், இளையவன்பேரில் அசூயையும் உண்டாய்விட்டது. ஏனெனில், மூத்தவன் பிழைத்துக் கொள்ளவழியிருக்கிறதாகவும், இளையவன் மூதேவி, துடைகாலி யெனவும், ஆதலால் அவன் விளங்கப்போகிறதில்லை யெனவும் சொல்வதுந்தவிர, அவனைக்காணுந்தோறும் எரிந்துவிழுவார். வீட்டில் சகலத்துக்கும் அவனையே உழைக்கச்சொல்வார். அவர்காரியாதிகள் முடிவுபெற இரவு மணி பத்துப் பதினென்றாகும். அதின்பேரில்பாடங்களைப் படிக்கவேண்டும். மறுபடி 3-மணிக்கு எழல்வேண்டும். வீட்டுக்காரியங்கள் பார்க்கவேண்டும். பள்ளிக்கு குறித்தகாலம் போதல் வேண்டும். இத்தோடு வயல், தோட்டம், முதலியவைகளுக்கோடச்சொல்வார். எதையாவது ஒரு சாக்கிட்டு அவனை அடிப்பார். 'சிறுவன் என்னபண்ணுவான்? "எண்ணுத எண்

(1)கவியுமின்=மூடுங்கள்.

ணமெல்லாமெண்ணி யெண்ணி" ஏங்குவான். சிலவேளைகளில் பையனை யடிக்கும் போது அவர் மனைவி வந்துவிட்டாலோ "எது அங்கே கிடந்ததோ" அதனையெடுத்து ஓங்கி வீசியெறிவார். அவரது மனைவியோ மறு வார்த்தை பேசாது தனக்குப் பிரமன் விதித்ததை நினைந்து கரகரவெனக் கண்ணீர்விட்டழுவாள். சில சமயங்களில் தன்னைத்தானே தேற்றிக்கொண்டு நடப்பாள். "குந்தித்தின்றால் குன்றும் மாளும்" அல்லவா? கூடியசீக்கிரத்திலேயே வறுமை தலையெடுக்க ஆரம்பித்தது. அன்றாடகம் காய்ச்சிக்குடிக்கும் பிழைப்பில்வந்தது. பரத்தையர்க்கீவதும், மொட்டைவிண்ணப்பங்க ளெழுதுவதும், சூதாட்டங்களாடுவதும், கோர்ட்டு கச்சேரிகளில் போட்டிபோட்டு ரூபாய்களை வாரிவிடுவதும் இப்பேர்க்கொத்த விஷயங்களில் தமாஷாய்க் காலங்கடத்தினால் வறுமை தலையெடுக்காதென்செய்யும்? முன்னமேயே தன் புருடனின் தன்மைகளைக்கண்டு வருந்திய அவரது மனைவிக்கு இப்படித் திண்டாட்டத்தில் வந்தபிற்பாடு அடைந்த விசனம் ஆதிசேடனும் கூற முடியாது.

இப்படிக் கஷ்டம் வந்தபிற்பாடும் நரசிமய்யர் தன் குடும்பவிஷயத்தைச் சிறிதும் கவனித்திலர். தன் புருஷன் வீட்டுவிஷயம் கவனியாமலும், சம்பாதிக்காமலுமிருந்தால் என்னபண்ணுவாள்? அவலிடித்தும், தண்ணீர் தூக்கியும், பட்சணம், பண்டம் விற்றும் போடப் புருஷன் தின்றுகொண்டு உட்கார்ந்திருந்தான். இப்படி அவள் கஷ்டப்படும்போது "அவள் மனம் குமுறிக்கொந்தளிக்கும்"; வெந்தழல் மெழுகுபோலும் "பாம்பின் வாயிற்பட்ட தேரைபோலும்" பரிதவிப்பள். தன்னைக் கொடுமையாய் நடத்துவதையும், தன் குமாரனைக் கொடுமையாய்த் தண்டித்தலையும், கண்டு மனம்பொறுதவளாய் 'ஹோ!' என வாய்விட்டலறுவாள். தன் புருஷனிருக்கும்போதே தன்னை யறியாமலே கண்ணீர் துளிக்கும். அவர் சிறிதும் கவனிக்கவேமாட்டார். உள்ள நகைகளையெல்லாம் விற்றுத் தொலைத்துப்போட்டார். அவரது மனைவிக்கு அவரைக்கட்டிக்கொண்ட அடையாள்மான ஒரு தாலிமட்டும்தான் மீந்தது. சில வேளைகளில் உதட்டிலொன்றும், வரியிலொன்றுமாக, அவருக்குப் புத்தியும் புகட்டிப்பார்ப்பாள். ஆனால் ஆஸ்பத்திரிக் கனுப்பும்படியான சிக்ஷை செய்வதைத்தவிற வேறொன்றும் அவருக்குத்தெரியாது. இப்படியாக இவர்கள் காலங்கடத்தி வந்தனர். வாத்தியார் அரங்கசாமியை அழைத்துவர ஒரு பையனை யனுப்பியதாக முன்னமேயே சொன்னோமே. பையன் அன்று வீட்டில் வேலை களதிகமாயிருந்ததால் நாழிகை சென்று பள்ளிக்கூடப் பையனுடன் வந்து சேர்ந்தான். அன்று அரங்கசாமி படிக்கவேயில்லை. நித்தியம் ஒரு நாளைப்போலவே உழைக்கவேண்டுமன்றோ? முதல் நாள், சிறுவனானாலும், வேலைசெய்த களைப்பினாலும் படியாது தன்னை மறந்து தூங்கிவிட்டான்.

காலமே பள்ளிக்குவந்ததும், நல்லநாளிலேயே பிடுங்கித்தின்னும் அவ்வாத்தியார் இன்று சும்மாவிடுவாரோ? பாடம் படிக்கவில்லையென்று கொடுத்த அடியால் உடம்பெல்லாம் தடிப்பேற, மூர்ச்சைபோக, தன் கந்தல் துணியில் அழுதுகொண்டே "பையன் பாடம் படிக்கவில்லையென்று" வாத்தியார் கொடுத்த சிபார்சுகடிதத்தையு மெடுத்துக்கொண்டு தந்தையார்முன் வந்து கடிதத்தைக் கொடுத்தான்.

நல்லமகானுபாவர் அவனையின்னவிதமாய்ச் சிக்ஷித்தாரென்று சொல்லத்தேவையில்லை. கரகரவென்று பையன் குடுமியைப்பற்றி யிழுத்துக்கொண்டுவந்து காற்செருப்பைக் கழற்றி உச்சந்தலையிலடித்து காதியுமிழ்ந்து வாசலிலிருந்து "ஓடிப்பேர்டாபயலே! "சோறுபோடமாட்டேன்" என ஒருகுத்தும் குத்தி வாசற்கதவைத் தாளிட்டுக்கொண்டு போய் விட்டார். தந்தை மனம்தான் அங்ஙனமெ

னின் தாய்மனம் சும்மாவிருக்குமா? "பெற்ற மனம் பித்தல்லவா"? தன் கையிலிருந்த மிச்சம் அரைரூபாயை எடுத்துவந்து மைந்தன் கையிற்கொடுத்து, கண்ணீர்துடைத்துக் கட்டியணைத்து "கண்மணீ இங்கிருந்தால் உயிர் துறந்துவிடுவாய், இச்சண்டாளன் எதிரிலிருப்பதைக்காட்டிலும் எங்கேயாவது போய்ப் பிழைத்துக்கொள்வது சிரேஷ்டம். என் துரையே! சாப்பாட்டுக்கென்னசெய்வாயடா? நீ கலங்கும்போது என்மனம் இடிந்துவிழுகிறதே அப்பா! இப்பேர்ப்பட்ட தந்தையும் உனக்கு வாய்க்கவேணுமா? இவ்வளவையும் நான் பார்க்கவேணும் என என் தலையிலே எழுதியிருக்கிறானே. ஐயோ! தெய்வமே! என் குழந்தை அநாதை, நீதான் "பாதுகாக்கவேணும்" என நெஞ்சடைக்கக் கண்ணீர் துளிக்கச்சொல்லிக்கொண்டிருக்கும்போதே அவளது கணவனது "சிம்மகர்ச்சனையை"க்கேட்டுத் தன்னை அடிப்பனென்ற பயத்தினால் விசனுக்கிராந்தியாய் உள்ளேபோய்விட்டாள்.

பையனோ நெஞ்சுபறையடிக்க, கண்ணீர் ததும்ப, எங்கேபோவதென்றறியாதவனாய் பக்கத்திலிருந்த கிணற்றில் இவ்விதக் கஷ்டங்களையனுபவிப்பதை விட, விழுந்து பிராணனை விட்டுவிடவேணுமென்ற துணிவுகொண்டு கிணற்றில் விழுவதேசரியான தீர்மானமெனத் தன்னுள்ளெண்ணித் தலைவிதியைநொந்து, தனிவழி நடப்பானாயினன்.

"அவன் போய்விட்டானே தேடவேணுமே" என்று அவனைப்பற்றிய கவலை சிறிதுங் கிடையாது, நரசிம்மய்யர், "யாரடா! சோற்று மறைவிலே யென்றால் நான் தான் நோயாளி பத்தியம் சாப்பிடுகிறேன்" என்றவனையும் ஜெயிக்கவல்லவராயிருந்தபடியால், விலாப்புடைக்கச் சாப்பிட்டுவிட்டு குறட்டைவிட்டுத் தூங்க ஆரம்பித்தார். இங்ஙனம் சிறிது காலம் சென்றது. கூடிய சீக்கிரமே மூத்தபையன் நாணுவையருக்கு எந்த சுவாமி புண்ணியத்திலேயோ "முன்சீப்" வேலைகிடைத்தது. இந்தச் சங்கதி நரசிம்மய்யருக்குத் தெரிந்ததும் சந்தோஷம் உச்சந்தலையைப் பிச்சுக்கொண்டு போனதால் மனைவிசகிதம் மூத்தவனிருக்குமிடம்வசித்துவந்தார். இளையவன்வீட்டைவிட்டுத்தொலைந்ததால்தான் தனக்கு மறுபடியும்சந்தோஷசம்பவம் நேரிட்டதென வெண்ணிப்பூரித்தார். மூத்தபையன் உத்யோகம் கிடைத்த ஒரு ஐம்பத்தினால் தன்னுடைய குலவழக்கங்களெல்லாம் கெடுத்துக்கொண்டு குலாசாரப் பிரஷ்டனானான். தந்தையாரை எடுத்தெறிந்து பேசுவான். அடிக்கப்போவான், இல்லாத 'ரோஷ்டெல்லாம்' பண்ணுவான். தந்தையார் தன் உத்யோக யோக்யதையை கொஞ்சமும் மதியாது "அடா"! எனக்கூப்பிடுவதைக் கண்டு சினமுறுவான். இப்படியிருக்க "முன்சீப்" லஞ்சம் வாங்கினதாக வெளிக்குவந்துவிட்டது. எல்லோரும் கோர்ட்டுக்குப்போய் ஏகமாய் நிரம்பியிருந்தனர். ஒரு மூலையில் முன்சீப் தந்தை நரசிம்மய்யரும் வீற்றிருந்தனர். கேஸை விசாரிக்க வந்த அந்தணச்சிறுவனொருவன் ஓடிவந்து நரசிம்மய்யரை பிரதக்ஷிண நமஸ்காரம் செய்தான்.

"ஐயோ! அரங்கசாமி இத்தனை நாள் எங்கடா போயிருந்தாய்? உன்னைச் சுத்தமாய் மறந்துவிட்டேனே என்னப்பனே? நான் செய்ததை மறந்துவிடடா! கண்மணி!" எனக்கதறினர். அவர்களடைந்த சந்தோஷம் நம்மால் விவரிக்க வொண்ணாது.

"ஒன்றை நினைக்கினது வொழிந்திட்டொன்றாகும்
அன்றியது வரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினுநிற்கும்
எனையாளும் ஈசன்செயல்."

கோ. எஸ். வைத்தியநாதய்யர்.

THE BRIDE'S TRIUMPH.

## வதூ விஜயம்.

### முன்னுரை.

**சூத்ரதாரன்** : [பிரவேசமாகி வாழ்த்துப் பாடுகின்றான்]

மலர்மகளே நினக்குரிய மருகியுடன் வாழாது மாநிலத்தி
லுலவுதலை யுற்றறிந்தே புவரிசூ ழுலகதனின் மாமிமார்தங்
குலவுமரு கியருடன்கூ டாதுவெறுத் தனருவளைக் கூடி வாழ்ந்தே
யலகிலுயிர்க் கரும்பெறலின் பளித்தியுன தருளினுக்கு மழகி தாமல்.

(நாந்திசெய்து சூத்திரதாரன் இரண்டடி நடந்து திரையை நோக்கி)

**சூத்ர.**—மாரிஷா! இங்கே வா.

(வாயிற்காப்போன் பிரவேசமாகின்றான்)

**மாரி.**—அத்தான்! இதோ வந்தேன். நீ பாடிய பாடல் இனிமையாயிருந்தது. எல்லாமிருக்க மலர்மகளை நிந்தித்தாய் என்?

**சூத்ர.**—அவளை யான் நிந்திக்கவில்லையே; வந்தித்தேன்; மருகியுடன்கூடி வாழ்கவென்று வேண்டினேன். கல்வியுடையோர் படும் கஷ்டம் கணக்கில் அடங்காது. ஸரஸ்வதி பிரஸன்னமானவிடத்து லக்ஷ்மி பிரஸன்னமாவதில்லை; லக்ஷ்மி யிருக்குமிடத்து ஸரஸ்வதி அணுகுவதில்லை. இதனாலன்றே தனவான்கள் பலரும் விவேக சூன்யராகி விதரணையின்றிப் பணத்தைப் பலவாறாகப் பம்புக்கும், பேய்க்கும், பரத்தையர்க்கும், வம்புக்கும், கொள்ளைக்கும், கள்ளுக்கும், கோவுக்கும், சாவுக்கும், கள்ளர்க்கும், திக்கும் இரையாக்குகின்றனர். அப்புல்லர் பொருள் வேசிக்கும் சந்துநடப்பார்க்கும் வேசிக்கு வேலைசெய்யுந் தாசிக்குமாகுமே யன்றி மற்றெவர்க்கு மாகாது. இத்தகையர் இருந்தென்ன, போயென்ன? எட்டிமரம் காயாதிருந்தென்ன, காய்த்துப் பலனென்ன?

**மாரி.**—அத்தான்! உன் வார்த்தை யுண்மையே. இப்போது எனக்கு ஓரிரகசியம் வெளியாயிற்று, ஒரு சந்தேகந்தெளிந்தது. கடந்த பத்தொன்பாம் நூற்றாண்டில் திரவியதானஞ் செய்ய விரும்புவோர்பலர் எழுத்துமூலமாய்க் கைகாட்டிட்டு வாக்கத்தஞ்செய்தால், பிறகு பணம்கொடுப்பது அரிது. இதற்குக்காரணம் வெகுநாளாய் எனக்குத் தெரியாமலிருந்தது. ஸரஸ்வதி பிரஸன்னமானவிடத்து லக்ஷ்மி பிரஸன்னமாவதில்லை யென்று நீ எடுத்துக் காட்டியதனால் அவர்கள் அவ்வாறு செய்வது நியாயமே யென்று புலப்பட்டது. வித்தையுடையோர் பலரும் தரித்திரத்தினால் வருந்தி மனநொந்து புலம்புவதை யானும் பல தடவைகளிற் கேட்டுச் சிந்தித்திருக்கிறேன். முற்காலத்துங்கூட வித்வான்களுடைய ஸ்திதி இப்படியே இருந்ததென்று

"அடகெடுவாய் பலதொழிலு மிருக்கக் கல்வி
அதிகமென்றே கற்றுவிட்டோ மறிவில் லாமல்
திடமுடன் மோ கனமாடக் கழைக்கூத் தாடச்
செப்பிடுவித் தைகளாடத் தெரிந்தோ மில்லைத்
தடமுலைவே சையராகப் பிறந்தோ மில்லைச்
சனியான தமிழைவிட்டுத் தையலார்தம்
இடமிருந்து தூதுசென்று பிழைத்தோ மில்லை
என்னசென்ம மெடுத்துலகி லிரக்கின்றோமே!"

முதலாகிய பாடல்களினால் நன்கு விளங்குகின்றது. மாமியாரை யநுசரியாது மருமக்களை யநுசரித்துப் படுந் துன்பத்தைவிட எத்துணைய நீசத்தொழிலேனும் மேன்மையென்று அவர்களுக்குத் தோற்றியதன்றே? இது மிகவும் விசனிக்கத்தக்கது. ஆதலால் மாமியும் மருகியும் கூடியிருக்கவேண்டுமென்று நீ விரும்பியது சரியே. யானும் அந்தத் திருமகளைத் துதிக்கின்றேன். (பாடுகின்றான்)

மலர்மகணின் கொழுநனெழின் மார்பகத்து வதிந்துநித்த மருவி நீடு
நலமுறுவாய் நானிலத்தி னின்மருகிநாமகள்பால் வெறுப்புற் றெங்கும்
உலவுறுமெம் முத்தமியே யுவளிடத்தி லுவப்புறினிவ் வுவரி சூழு
முலகுயிர்க ளெஞ்ஞான்று நனிமகிழ்வுற் றுனைப் புகழு முண்மை யாபால்.

**சூத்ர.**—மாரிஷா! மயிலே, மயிலே, இறகு போடெனின் அது போடுமோ? மருகியின் கஷ்டம் மாமிக்கு என்தெரியும்? பூனைக்குவிளை

யாட்டு எலிக்குப் பிராணசங்கடமன்றே? மருகியாயிருந்தாலன்றித் திருமகளுக்கு நாமகள் படுந்துன்பந் தெரியாது. என்செய்வேம்?

மாரி.—அவளை மருகியாக்கி விடுவோம். இது நாடகசாலையென்பதை மறந்தனையோ?

சூத்ர.—மாரிஷா! நன்கு ஞாபகப்படுத்தினை. அங்ஙனமே செய்வோம். (பாடுகின்றான்)

ஒருதனி மாலின் மார்ப முற்றினி துவந்துவாழுந்
திருமக ணினக்கு வந்தசெற்றமென் செப்பி னாலும்
மருகியி னிடரு ளொன்று மனனுற வறியாய்போலும்
மருவுமத் தகைய ளாகீ வந்திடக்காண்டு மின்னே.

இந்த ராஜராஜ நரேந்திரபுரத்தில் இப்போது வஸந்தோற்சவத்திற்காகச் சேர்ந்திருக்கும் மஹாஜனங்களின் முன்னர், பிரம்மஸ்ரீ சூரியநாராயணக் கவிராஜரது ஆக்கினையினால் திருவையாறு ஸ்வாமிநாத ஐயர் விலாஸார்த்தமாகப் புதிதாய்ச் செய்திருக்கும் வதூவிஜயம் என்னும் உருவகத்தை ஆடி அவர்களைச் சந்தோஷப்படுத்தி மெய்ப்பு அடைய விரும்புகிறேன். அதன்கண் திருமகளே மருகியாய் நடிப்பாள்.

மாரி.—அத்தான்! நீ கொண்டகோள் முடிக்குந்திறமுடையவன். நீ விரும்பியவாறே செய்.

சூத்ர.—மாரிஷா! அதற்கு வேண்டிய பாத்திர சாமக்கிரியைகள் இப்போது சித்தமாயிருக்கின்றனவா?

மாரி.—அவை யனைத்துஞ் சித்தமே; உனது ஆஜ்ஞையே வேண்டியது.

சூத்ர.—ஆயின், இப்போதே ஆரம்பிப்போம்.

---

நாடக பாத்திரங்கள்.

---

| | | | |
|---|---|---|---|
| 1. ராமகிருஷ்ணசாஸ்திரி | ... | வைதிகர். | |
| 2. அகிலாண்டம் | ... | சாஸ்திரியின் மனைவி. | |
| 3. சாமா ஐயர் | ... | ஷை | மகன். |
| 4. லக்ஷ்மி | ... | ஷை | மருகி. |
| 5. கமலாம்பா | ... | லக்ஷ்மியின் தோழி. | |
| 6. அநந்தன் | ... | ஷை | மகன். |
| 7. தருமஸம்வர்த்தனி | ... | ஷை | மகள். |
| 8. ஆநந்தவல்லி | ... | தருமியின் தோழி. | |

ஏனையோரும்.

## வதூவிஜயம்.

---

முதல் அங்கம்.

---

முதற்களம்.

---

நிகழ்விடம்—சென்னையில் ஒரு வீடு.

காலம்—அந்திவேளை.

லக்ஷ்மி.—(குழந்தையைப்பார்த்து) "ஸர்வமங்கள மாங்கல்யே" என்னும் சுலோகத்தைச் சொல்லி அம்மனுக்கு நமஸ்காரம்செய். இதோ திருவிளக்கு ஏற்றிவைத்திருக்கிறேன். கைகால் கழுவி வந்தாயா?

தருமஸம்வர்த்தனி.—அம்மா! கால் அலம்பிக்கிண்டுதான் இங்கேவந்தேன். அந்தச்சுலோகம் எனக்குத் தனியாச் சொல்லத்தெரியாது, நீசொன்னால் நானும் ஒன்னோடெ சொல்றேன்.

ல.—ஆனால் சொல்லு: ஸர்வமங்கள மாங்கல்யே

தரும.—"ஸர்வமங்கள மாங்கல்யே"

ல.—சிவே ஸர்வார்த்த ஸாதகே

தரும.—"சிவே ஸர்வார்த்த ஸாதகே"

ல.—சரண்யே திரியம்பகே கௌரீ

தரும.—"சரண்யே திரியம்பகே கௌரீ"

ல.—நாராயணி நமோஸ்துதே.

(விளக்கை நோக்கி நமஸ்காரம்செய்கிறாள்)

தரும.—"நாராயணி நமோஸ்துதே."

(நமஸ்கரித்து எழுந்திருக்கும்போது தனது நிழலைப்பார்க்கிறாள்)

ல.—ஸம்வர்த்தனீ! நிழலைப்பாராதே, அம்மா.

தரும.—பாத்தா என்ன?

ல.—நிழலைப்பார்க்கலாகாது, அம்மா, நீ பார்க்காதே.

தரும.—"ஆகாது" இன்னா என்ன?

ல.—"ஆகாது" என்றால் "ஆகாது." விவரம்சொன்னால் உனக்குத் தெரியாது. நிழலைப்பார்த்தால் உடம்புக்கு ஆகாது என்றுவைத்துக்கொள். "ஆகாது" என்ற காரியத்தைச் செய்யக்கூடாது.

(என்று கடிந்துசொல்லிப் பிறகு தனக்குள்ளே)

இந்தக்குழந்தை யெவ்வளவு ! யாதேனுமொரு வார்த்தைசொன்னால், "ஏன்" என்று ஒவ்வொன் றிற்கும் காரணம் வினவுகின்றது. நாம் தகுந்த காரணமாய்ச்சொல்லிச் சமாதானப்படுத்தாவிடின் முகத்தைச் சுளித்துக்கொள்கின்றது. அதற்குத் திருப்திப்படுவதில்லை. இதுவும் காலமகிமையோ? முற்காலத்திற்கும் இப்போதைக்கும் வெகுவித்தியாசம்! இக்காலத்தில் அறிவுமிகுந்திருக்கிறது. எதையும் மூடபக்தியுடன் நம்பாமல் தர்க்கித்துக்கேட்குந் தன்மை யுண்டாயிருக்கின்றது.

**ஆநந்தவல்லி.**—தருமீ! இதோபாரு, எங்கப்பாவைக்கேட்டு இந்த பாட்டுபொஸ்தகம் வாங்கிண்டுவந்தேன். நீ ஏன் என்னமோ போலே ஒக்காந்திண்டிருக்கே ?

**தருமி.**—எங்கம்மா நழலெப்பார்க்கலாகாது இன்னு சொன்னா. ஏன் ஆகாது இன்னுகேட்டேன், அதுக்கு கோச்சுக்கிண்டா.

**ஆநந்.**—என்னையும் எங்கம்மா கோச்சுக்கிண்டா விளக்கை வாயாலே ஊதியணச்சேன் இன்னு. ஊதினாயென்னன்னு கேட்டேன். "ஆகாது" இன்னு சொன்னாக் கேக்கமாட்டயா இன்னு அதட்டினா. நான் அழுதுகிண்டிருந்தேன். எங்கப்பா இந்த பொஸ்தகங்கொடுத்தார்.

**ல.**—(தனக்குத்தானே) இதுகாலஸ்வபாவந்தான்; காரணம் கேட்குங்காலம்! அறிவுமிகுதற்கு இதுதான் அடையாளமோ? என்னவாயினும் என்ன ? சிறு குழந்தைகட்குப் பெரிய விஷயங்களைப்போதிப்பது எங்ஙனம்? இதனாலன்றே பூர்வத்துத் தருமசாஸ்திரக்காரர்களெல்லோரும் காரணங்களை யுரையாமல் விதிகளைமாத்திரம் ஏற்படுத்திப்போயினர் ? அதனால் அவர்கள் காரணந்தெரியாமற் கண்ணைமூடிக்கொண்டு மனம் வந்தவாறு விதிகளையேற்படுத்தினர் என்று இகழலாமா? அக்காலத்திற் சாமான்ய மனிதர்களுக்கு மூளையின் தேர்ச்சி போதாததனால் அவர்களுக்குக் காரணங்களை விவரித்துரைப்பது சாத்தியமன்றென்று அம்மகான்கள்—நாம் இப்போது இந்தக் குழந்தைக்குக் காரணந்தெரிவிக்க முடியாமல் அதனை அதிகாரத்தினால் அடக்கியதுபோல—விதிகளை மாத்திரம் பிரசித்தமாய் ஏற்படுத்திப்போயினரென்று நாம் ஏன் கொள்ளக்கூடாது?

(பாடுகின்றாள்)

(ஸீஸபத்தியம்)

உலகுயிர்களடைவினி லறிவுமிகலுண்மையாலுவந்து காரணகாரியங்களோர்ந்து
நலமுறுதனேரிதே நமதுஸம்வர்த்தனிநாடுபொருண்மறிந்துஞ்சொலாது
வலமுறுமொராணையான் வகையுரை செய்தோமனுள் மதிவலியிலா நிலைமறுவறத்தேர்ந்
திலகுமிப்பெற்றிகொண்டேயன்டு முனிவரர்கள் எழுதுமிருதிமுதலவாஞ் சாசனங்கள்

காரணமுமுரைக்காது கட்டளைகளாய்
தாரணியுளார் தமக்கறைவதென்னின்
நாரமொடுநாம் விரும்பாதவற்றைக்
காரமொடுகூறுவு காரணமுமென்னே ?

**அகிலா.**—(திரையினுட்புறத்திருந்து) போரும், நீ வக்கணைபடிச்சது. கொழந்தைகளுக்குச் சாதம் போடவேண்டாமா? நாட்டுப்பொண்ணு லக்ஷணமா ஆத்துக்காரியங்களைப் பார்க்கிறபுத்தி ஒனக்கு என்னிக்கு வருமோ! பிள்ளைகளைப் பெத்துவிட்டா ஆச்சோ? வளக்கிறதின்னு கஷ்டம். கொழந்தை தருமஸம்வர்த்தனி தூங்கிப்போய்விடுவளே.

**ல.**—தருமம்! பாட்டி உன்னைச் சாப்பிடக் கூப்பிடுகிறாள்; சீக்கிரமாய்ப் போ.

**தரு.**—நான் சாப்பிட்டுட்டு வரட்டுமா?—ஆநந்தவல்லி ?

**ல.**—அவளை நான் அவர்களகத்திற் கொண்டுபோய் விடுகிறேன். அவள் சாப்பிட்டாய்விட்டதாம்; தூக்கத்திற்கலைகிறாள். நீபோ, பாட்டி மறுபடியுங் கூவுமுன் போ.

[தருமஸம்வர்த்தனி உள்ளேபோகிறாள் : லக்ஷ்மி ஆநந்தவல்லியை அழைத்துக்கொண்டு போகும் பொழுது]

அநந்தா! விளக்கண்டை யுட்கார்ந்து சற்று நேரம் வாசிக்கலாகாதா ?

---

## The Illusion dissector.

## மோஹமுத்கரம்.

---

1. பஜகோவிந்தம் பஜகோவிந்தம் பஜகோவிந்தம் மூடமதே;
ஸம்ப்ராப்தே ஸந்நிஹிதே காலே நஹிநஹி ரக்ஷதி டுக்ருங்கரணே.

ஓ புத்தியற்றவனே! இறுதிக்காலம் சமீபிக்கும்பொழுது டுக்ருங்கரணே என்பது உன்னை இரக்ஷிக்கமாட்டாதென்பது திண்ணம். ஆதலின், நீ எப்பொழுதும் ஸ்ரீ கோவிந்தமூர்த்தியைப் பஜிப்பாயாக.

["டுக்ருங்கரணே" என்பதொரு வியாகரண சூத்திரத்தின்கணுள்ளபதமாம். 'க்ரு'=செய்வது. வியாகரணசாஸ்திரத்தைப் படித்து வித்துவானாக வேண்டுமென்னு மாசை மிகுந்து ஒருவன் எப்பொழுதும் இடைவிடாது அந்தச் சாஸ்திரப் பயிற்சியிலேயே புத்தியைச் செலுத்தினவனாய்ப் பாரமார்த்திகத்தை (முக்திநெறியை) நாடாமல், தெய்வத்தை நினையாமல், ஆத்மவிசாரஞ் செய்யாமல் தனது ஆயுளை வீணாகக் கழித்துவந்தான்.

இத்தகையர்களைப் பித்தர்களென்று சொல்லுகின்றார்கள், முப்பாலைப்போன்ற நாலடிசெய்த முனிவரர்கள்:

"நிலையாமை நோய்மூப்புச்சாக்காடென்றெண்ணித்
தலையாயார் தங்கருமஞ் செய்வார்—தொலைவில்லாச்
சத்தமும் சோதிடமு மென்றாங் கிவைபிதற்றும்
பித்தரிற் பேதையா ரில்."

செல்வமுதலியவற்றுள் எண்ணிறந்த குற்றங்களிருப்பதைக் கண்டு, அவற்றிற் சிறிதேனும் அபிமானம் வையாமல், நற்கதிக்கேதுவாகிய வேதாந்த சாஸ்திர முதலியவற்றைக் கற்றுக்காலங்கழிப்பர் மேலோர். இம்மைக்கண் பெரும்பாலும் உபயோகப்படுகிற இலக்கண முதலிய நூல்களையே கற்றுக் காலத்தை வீணிற் போக்குவோர் மூடர். 'சத்தம்'=இலக்கணநூல்.

வீணிற் காலத்தைச் செலவழியாது உயிர்க்கு உறுதி பயப்பனவற்றைச் செய்வானாயின், அவன் மறுபடியும் பிறவித்துன்ப மடைவதில்லை யெனத் தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார் சொல்லியிருக்கிறார்:

"வீழ்நாள் படாது நன்றாற்றி னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்."

சத்தமும் சோதிடமுமே காலம் போக்கற் குதவாவென்று சொல்லவே, வேறுநூல் கற்கவேண்டுமென்பதாயிற்று.

நாலடியாரில் "கல்வி" என்னும் அத்தியாயத்திலும் இதைக்குறித்துச் சொல்லப்பட்டிருக்கின்றது:

"அலகுசால் கற்பினறிவு நூல் கல்லா
துலகநூ லோதுவ தெல்லாம்—கலகல
கூஉம் துணையல்லாற்கொண்டு தடுமாற்றம்
போஒம் துணையறிவாரில்."

பலநூல்களிருந்த போதிலும் ஆத்துமஞானத்தைப் போதிக்கும் ஞான நூலையே முக்கியமாய்க் கற்கவேண்டும். அதனைக் கல்லாதுவிட்டு உலக இன்பத்திற்கு வேண்டிய நூலையே கற்பதுயாதொரு பொருளு மில்லாமற் கலகல வென்று சும்மா கூவுவதுபோல் வீணேயன்றி, ஸம்ஸாரபந்தத்தை நீக்கும் மேன்மையதன்று.

'உடம்பினைப்பெற்ற பயனாவதெல்லாம்
உடம்பினி லுத்தமனைக்காண்"

என்று ஒளவையாரும் திருவாய் மலர்ந்தருளியிருக்கின்றார்கள். மானுடஜன்மமெடுத்ததற்கு நாம் ஆத்ம விசாரஞ்செய்யவேண்டியது ஆவசியகம். பாரமார்த்திக சிந்தனை (நினைவு) சற்றேனு மில்லாமல் ஒருவன் இதர விஷயங்களில் தன் வாழ் நாளைக் கழிப்பானாகில், அது வீண் என்றுசொல்வது தோஷமன்று. இவ்வாறு மேற்கூறிய வியாகரணியானவன் "டுக்ருங்கரணே" என்னும் ஸூத்திரத்தைப் பாடஞ்செய்துகொண்டிருந்த வேளையில், அஜ்ஞர்களைத் தஞ்சியர்களாக்கி (அறிவிலிகளைப் புண்ணியச் சிறப்புடையோராக்கி) நற்கதியடைவிக்கும் பொருட்டு லோகோபகாரார்த்தமாய் அவதரித்த கருணையங்கடலாகிய ஸ்ரீசங்கராசார்ய ஸ்வாமிகள் அந்தச் சாஸ்திரியைப்பார்த்து "பஜகோவிந்தம்..." முதலாயுள்ள இந்தப்பன்னிரண்டு சுலோகங்களையும் சொல்லவே, அவனுக்கு ஞானோதயமாகி அவன் தஞ்சியனாயினன். இந்தக் கிரந்தத்தை வாசிக்கும்நாமும் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியின் திவ்யாநுக்கிரகபலத்தினால் (திருவருள் விசேடத்தினால்) நமது லௌகிக வியவகாரங்கள் எவ்வளவு இருக்கினும், கழைக்கூத்தாடியானவன் எவ்வளவு ஆடினும் பாடினும் தான் தலைமீதுகொண்ட குடத்தினின்றும் நீர் தளும்பாதவாறு ஜாக்கிரதையாய் நடக்கவேண்டுமென்று மனத்தை அதன்மீது எப்படிச்செலுத்தியிருப்பனோ அதுபோல, பாரமார்த்திக விஷயத்தில் அதனினும் அதிகமான ஞாபகம்வைக்கும்படியான ஞானத்தைப் பெறுவோமாக. இதற்குப் பரமேஷ்டி (ஈசுவரன்) நமக்குத் துணைசெய்வாராக.

இந்தச் சுலோகத்தைப் பின்னால் வருகிற ஒவ்வொரு சுலோகத்தின் கடையிலும் பல்லவியைப் போலச் சேர்த்துச் சொல்லவேண்டியது].

2. மூடஜஹீஹி தநாகமத்ருஷ்ணாம் குருஸத்புத்திம் மநஸிவி த்ருஷ்ணாம்,
யல்லபஸே நிஜகர்மோபாத்தம் வித்தம்
தேந விநோதயசித்தம்.

ஓ மூடா! பணம் சேர்க்கவேண்டுமென்னும் பேராசையை விட்டுவிடு. பேராசையை விட்டு விலக்கி உன் மனத்தில் நற்புத்தியை நிலைகொள்ளச்செய். உனது குலத்திற்கு அமைந்த தொழிலினுல் உனக்கு என்ன கிடைக்கின்றதோ, அப்பொருளைக்கொண்டு உன் மனத்தைத் திருப்திசெய்துகொள்.

["குருஸத்புத்திம் மநஸிவி த்ருஷ்ணாம்:" பேராசைநீங்கிய சிறந்த அறிவை மனத்தில் அப்பியசித்து அதனை உன் இதயத்தில் நிச்சயமாய் இருக்கும்படி செய். நல்லறிவு ஒரு மனிதனுக்கு அப்போதைக்கப்போது ஒரோர் சமயத்தில் தோன்றி மறையும். அப்பியாசத்தினுல் அது மறைந்துபோகாமல் நிலையாய் இருக்கும்படியாய்ச் செய்யவேண்டும். நல்லறிவு உதிக்கவேண்டுமாயின் ஆசைகள் அற்றுப்போகவேண்டும். ஆசைகள் உள்ளளவும் மனம் நாலு பக்கத்திலும் திரிந்து அலைந்துகொண்டிருக்கும். ஆசைகள் மூன்றுவிதம்: மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை. இவை மூன்றிற்கும் ஸம்ஸ்கிருதத்தில் "ஈஷணத்ரயம்" என்று ஒரு பொதுப்பெயர் உண்டு. இவை மூன்றனுள் பொன்னாசையானது வெகு பெரிது. மண்ணாசையு மிதனிற் சேர்ந்ததேயாம். அதனை விடுவது கஷ்டம். பணம் இருந்தால் மற்ற இரண்டு ஆசைகளையும் நிறைவேற்றிக்கொள்ளலாம். ஆதலால் ஜனங்கள் எல்லோரும் பொருளைத்தேடுவதற்கே பிரயத்தினப்படுகிறார்கள். ஆயிரம் பாடு அரும் பாடு படுவதும் பணம் சம்பாதிப்பதற்கே யன்றோ? "ஸர்வேஜநா: காஞ்சனம் ஆச்ரயந்தி" என்றதும் இந்த உலக அனுபவத்தை யநுசரித்தேயாம். "பணமென்றால் பிணமும் வாய்திறக்கும்" என்னும் பழமொழி வழக்கத்தில் வரவேண்டுமாயின், பணத்தின்மீது ஜனங்களுக்கு எவ்வளவு ஆசையிருக்கவேண்டும்! கஷ்டப்பட்டு வாசிப்பதும், பரிக்ஷைகளில் தேறுவதும், பிறகு உத்தியோகம் சம்பாதிப்பதும் பணம் சம்பாதிக்கும்பொருட்டே யென்றும்; அந்தப்பணத்தைக்கொண்டு பெண்டு பிள்ளைகளுக்கு ஆடையாபரணங்கள் செய்வதும், சாப்பாட்டுக்குக் கஷ்டமில்லாதிருக்கும்பொருட்டுப் பூமிகள்வாங்கிப் பயிர்செய்வதுமே தாம் இவ்வுலகிற் பிறந்ததற்கு முக்கியமான பயனென்றும் சாதாரணமாய் அநேகர் நினைத்துக்கொண்டு, அவ்வாறே தமது வாழ்நாளைக்கழித்து வருகின்றார்கள். இவைகளினுல் வரும் சுகம் அற்பமென்றும், இந்த அநுபவங்களெல்லாம் துக்கத்திற்கே காரணங்களென்றும் அவர்கள் உணர்வதில்லை. இத்தகைய சுகம் நிலையில்லாச் சுகமாம். இப்படிக் கஷ்டப்பட்டுப் பணத்தைச் சம்பாதித்தும் அவர்களுடைய ஆசை திருப்தியாவதில்லை. திருப்தியில்லாவிடத்துச் சுகமில்லையென்று சொல்லவும்வேண்டுமோ? ஆசைக்கு இடங்கொடுத்ததே பெருந் தவறு; ஏனெனின், அதுவே துக்கங்களை விளைக்கின்றது; அஃது ஒருபொழுதும் அடங்குவதில்லை. மேன்மேலும் ஆசை வளருகின்றது; ஆதலின் சுகத்திற்குப் பதிலாகக் கவலை பிராப்தியாகின்றது. தாயுமானவர் சொல்லுகிறார்:

"ஆசைக்கோ ரளவில்லை யகிலமெல் லாங்கட்டி
யாளினுங் கடன்மீதிலே
யாணைசெல வேநினைவ ரளகேச னிகராக
வம்பொன்மிக வைத்தபேரு
நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர்
நெடுநா ளிருந்தபேரு
நிலையாக வேயினுங் காயகற் பந்தேடி
நெஞ்சுபுண் ணாவர்..."

பொன்னாசை மிகக்கொடிது; ஆதலின் அஃது உள்ளவரையில் ஞானம் சித்தியாது; மனம் ஒரு வழிப்படாது. ஆகையால் முதன்முதலில் அதனை விட்டு ஒழிக்கவேண்டுமென்று ஆசாரியர் போதிக்கின்றார். இதேமாதிரியாக, ஈசாவாஸ்ய உபநிஷத்தின் முதன் மந்திரத்திலும் "யாருடைய தனத்தையும் விரும்பாதே" என்று உபதேசிக்கப்படுகின்றது. அது ஸந்நியாஸிக்குச்சொன்ன உபதேசமாம். இங்குக் கிருகஸ்தனைப்பார்த்துச் சொல்லுமிடத்து, குலவிருத்தியினுல் என்ன பொருள் கிடைக்கின்றதோ அதனைக்கொண்டு திருப்தி யடைந்திருக்கவேண்டுமென்று ஆசாரியர் சொல்லுகின்றார். தேகம் நிலைப்பதற்கும், சம்சாரத்தை வகித்து நடத்துவதற்கும் எவ்வளவு திரவியம் வேண்டுமோ அவ்வளவு கிடைத்தாற் போதுமென்று திருப்தி யடையவேண்டும். ஏனெனின், பணத்தினுலாவது, ஸம்ஸாரத்தினுலாவது நிலையான சுகம் கிடைக்கமாட்டாது. ஆனல், பணத்தைச் சம்பாதிப்பதனுற் பிராணனைக் காப்பாற்றிக்கொண்டு, எப்பொழுதும் அழியாதிருக்கும்படியான பரம சுகத்தை ஆத்மஞானத்தில் நாடவேண்டும். நாம் பிழைத்திருப்பது பணம் சம்பா

திப்பதற்கன்று; அதனாற் சுக மனுபவிப்பதற்கன்று. அதனாற் சுகம் வருமென்று நினைப்பது அறிவீன மாம்.

"மாணிக்க முத்து வயிரப் பணிபூண்டு
ஆணிப்பொன் சிங்கா தனத்தி லிருந்தாலும்
காணித் துடலைநமன் கட்டியே கைப்பிடித்தால்
காணிப்பொன் கூடவரக் காண்கிலமே நெஞ்சமே."

"கற்கட்டு மோதிரநற் கடுக்கனிரை ஞான்பூண்டு
திக்கெட்டும் போற்றத் திசைக்கொருத்த ராளுனும்
பற்கிட்ட வேமனுயிர் பந்தாடும் வேளையிலே
கைச்சட்டம் கூடவரக் காண்கிலமே நெஞ்சமே."

ஆத்மவித்தையைப் பயின்று அந்த ஞானத்தினால் நிலையான பரமாநந்த சுகத்தை அநுபவிக்கும்பொருட்டே நாம் பிழைத்திருக்கவேண்டும்; பிழைத்திருக்கவேண்டுமாயின், ஆகாரம் முதலியவற்றிற்காகத் திரவியம் சம்பாதிக்கவேண்டும். அதற்கு எவ்வளவுவேண்டுமோ அதைவிட அதிகமாகத் திரவியந் தேடுவது பேராசையின் குறியாம். தனது குலவிருத்தியைவிட்டு வேறொரு தொழிலைப்பயிலுவது அதிகமாய்ப் பணம் சம்பாதிக்கலாமென்னும் எண்ணங்கொண்டேயன்றோ? ஆகையால், உனது குலத்துக்குரிய தொழிலைச் செய்யென்று சொல்லப்பட்டது. எவனுக்காயினும் அவனவனுடைய குல விருத்தியே நல்லதென்று **ஸ்ரீ கிருஷ்ணபகவான் பகவத்கீதையிற்** சொல்லியிருக்கிறார்:

"ச்ரேயான் ஸ்வதர்மோ விகுண: பரதர்மாத் ஸ்வ
நுஷ்டிதாத்,
ஸ்வதர்மேநிதனம் ச்ரேய: பரதர்மோ பயாவஹ:"

வாழ்நாள் முழுதும் பணம் சம்பாதித்துச்சேர்த்துப் புதைத்துவைப்பதிலேயே காலம் போக்குவார் சிலர். தேடுவதில் திறமையில்லாதபோதிலும் செல்வவந்தனாய் மாத்திரம் ஆகவேண்டுமென்னும் அவாவுடன் அலைந்து திரிவார் அநேகர் இவ்வுலகில். ஒருவனுக்கு வேண்டிய தருமார்த்த காமமோக்ஷமெனும் புருஷார்த்தங்கள் நான்கினுள் அர்த்தமும் ஒன்று; அஃதாவது, பொருள். இவைகளுக்கு முறையே தென்மொழியில் அறம், பொருள், இன்பம், வீடு எனப் பெயர். கடையிலிருக்கும் வீட்டை அடைவதற்குப் பொருள் ஒரு சாதனமேயன்றி, நாம் கடையில் உறுதியாய்ப் பிடித்துத் தொழவேண்டிய வஸ்துவன்று. ஆயினும், இஃது அறத்திற்கும் இன்பத்திற்கும் இடையிலிருப்பதனால், இல்லறம் துறவறம் என்னு மிரண்டு அறத்தையும் விருத்தி செய்வதற்குத் தக்க கருவியாயும், பின்னிருக்கும் இன்பமாகிய சிற்றின்பங்களை யடைந்து அநுபவிப்பதற்குரிய ஏதுவாயுமிருக்கின்றது. தருமத்தின் வழியாகவே யன்றிப் பொருள் தனியாய் மறுமைக்குப் பிரயோஜனமானதன்று. அத்தகைய செல்வப்பொருளையே நாம் முடிவில் அடையவேண்டிய பொருளென்றெண்ணி நம் பிரயாசையையெல்லாம் இதற்கே தொலைத்துவிட்டுப் பரம்பொருளை நாடாதிருப்பது என்ன அறியாமை! என்ன அறியாமை! செல்வம் நிலையாப்பொருளென்பது,

"அகடுறயார்மாட்டுநில்லாது செல்வம்
சகடக்கால் போலவரும்"

என்று **நாலடியா**ரிலும்,

"நிறை செல்வம் நீர்ற்சுருட்டு நெடுந்திரைகள்"

என்று **நீதிநெறிவிளக்கத்**திலும், இன்னும் பற்பல விதமாகப் பற்பல நீதிநூல்களிலுங் கூறப்பட்டிருக்கின்றது. **ஸ்ரீமத் சங்கராசாரியரும்** செல்வம் நிலையாமையை யறியாத மாக்கள் அதனையே ஒரு பெரும் பொருளாகவும் பரம்பொருளாகவும் கொண்டிருப்பதைக் கண்ணுற்றுப் பரிதபித்துப் பரம்பொருளைக்குறித்துப் பஜிக்கும்படி இந்தச் சுலோகத்தைச் சொன்னார்.

மேலும், பிராம்மண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர் என்னும் நான்கு வருணத்திற் பிறந்தோரும், தங்கள் தங்கள் குலத்திற்குரிய தொழிலைச்செய்து அதனால் வரும் பொருள் எவ்வளவா யிருந்தபோதிலும் திருப்தி யடைந்திருத்தல்வேண்டும். **திருப்தி** என்னும் பொருள் ஒருவனிடம் இருக்குமாயின் துக்கம் என்பதே அவனை அணுகாது; அவன் எப்பொழுதும் சுகத்திலேயே இருப்பான். அப்படி ஒருவன் ஸ்வதர்மத்தை, அஃதாவது, தன் குலத்தொழிலைச் செய்யாது மற்றோர்களுடைய தொழிலை மேற்கொள்வானாயின், அவன் வரன்முறை கடந்து போவதுமன்றிப் பொறாமை முதலிய துர்க்குணங்கள் மேலிட்டுத் தனக்கு இருக்கவேண்டிய பெருமையையும் சுகத்தையும் போக்கிக்கொள்வான். ஆகையாற்றான், கிடைத்தபொருளை வைத்துக்கொண்டு, அதிகத்திற் காசைப்படாமல், உயிர்க்கு உறுதி பெறற்குரிய மார்க்கத்தை நாடல்வேண்டுமென்று வற்புறுத்தப்பட்டது.

(இன்னும் வரும்.)

A Study of the Puranas.

## புராண வாராய்ச்சி.

[இதனடியில்வரும் குறிப்புக்கள் ஸாது நிச்சலதாஸ் என்பவர் ஹிந்தி பாஷையிலெழுதியிருக்கிற விசாரஸாகரமென்னும் அற்புதக்கிரந்தத்தினின்று எடுக்கப்பட்டன.]

புராணங்கள் பதினெட்டு உள. அவை வியாஸரென்னு முனிவராற் செய்யப்பட்டன. அவை 1. பிரம்ம, 2. பத்ம, 3. வைஷ்ணவ, 4. சைவ, 5 பாகவத, 6. நாரதீய, 7. மார்க்கண்டேய, 8. ஆக்நேய, 9. பவிஷ்ய, 10. பிரம்மவைவர்த்த, 11. லைங்க, 12. வாராஹ, 13. ஸ்கந்த, 14. வாமன, 15. கூர்ம, 16 மத்ஸ்ய, 17. கருட, 18. பிரம்மாண்டபுராணங்களாம். காளீபுராணமுதலிய வேறு பல புராணங்களுமுண்டு. அவை உபபுராணங்களாம். சிலர் உபபுராணங்களும் பதினெட்டு இருக்கின்றனவென்பார்கள். அது சரியன்று; உபபுராணங்களநேகமுண்டு. இரண்டு பாகவதங்களிருக்கின்றன — ஒன்று வைஷ்ணவம், மற்றொன்று தேவீ (பரவதீ) பாகவதம்; அவை பொவ்வொன்றிலும் பதினெண்ணாயிரம் கிரந்தங்கள் (சுலோகங்கள்) இருக்கின்றன; ஒவ்வொன்றும் பன்னிரண்டு 'ஸ்கந்தங்க'ளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது; அவையிரண்டில் ஒன்று புராணம், மற்றது உபபுராணமாம்; இரண்டும் வியாசராலேயே செய்யப்பட்டனவாகையால் இரண்டும் பிரமாணங்களேயாம். அவர் புராணங்களைச்செய்தது மன்றிச் சில உபபுராணங்களையுஞ் செய்திருக்கின்றார். பாராசர் முதலிய முனிவர்களும் சில உபபுராணங்கள் செய்திருக்கிறார்கள். ஆகையால் உபபுராணங்களும் பிரமாணங்களேயாம். உபநிஷத்துக்களின் கருத்தே புராண உபபுராணங்களின் தாற்பரியமாம்.

சகலபுராணங்களுக்குங் கர்த்தாவாகிய வியாஸர், ஸ்கந்தபுராணத்திற் சிவனுக்கு ஸ்வதந்திராதி ஈசுவரதர்மங்களுண்டெனச் சொல்லியிருக்கிறார். இதர தேவதைகளுக்குச் சிவபிரானுடைய கிருபையினால் எல்லா விபூதிகளுங் கிடைக்குமென்றுஞ் சொல்லியிருக்கிறார். ஆகையால் இவர்களுக்கு ஜீவதர்மம் சொல்லப்பட்டது. இப்படியே வைஷ்ணவமான பத்ம புராணத்தில் விஷ்ணுவுக்கு ஈசுவரத்துவம் சொல்லப்பட்டிருக்கிறது. இன்னுஞ் சில புராணங்களிலும் உபபுராணங்களிலும் கணேசர் முதலான தேவதைகளுக்கு ஈசுவரத்துவம் சொல்லப்பட்டிருக்கின்றது. இவ்விதமாக வியாஸருடைய வாக்கியங்கள் ஒன்றுக்கொன்று விரோதமாயிருக்கின்றனவே?

ஆயினுமிதற்குச் சமாதானமென்னவெனின், எல்லாரும் ஈசுவரர்களேயாம். ஒரு பிரகரணத்தில் ஒரு தெய்வத்தைத் துதித்து மற்றொரு தெய்வத்தை நிந்திப்பதனால் அந்த நிந்திக்கப்பட்ட தெய்வத்தை யுபாசிக்கக்கூடாதென்பது வியாஸருடைய அபிப்பிராயமன்று. வைஷ்ணவபுராணத்திற் சிவன் முதலிய தேவதைகளை நிந்திப்பதும் விஷ்ணுவைத் துதிப்பதும் விஷ்ணுவுபாசனையிற் பிரவிருத்தியுண்டாக்குவதற்கு ஹேதுக்களாயிருக்கின்றன. இவ்வாறு, சைவபுராணத்தில் விஷ்ணுவை நிந்திப்பதும் (தாழ்மையாய்ச்சொல்லுவதும்) சிவ உபாஸனையிற் பிரவிருத்தியுண்டாக்கும் பொருட்டேயாம். நிந்திக்கப்பட்ட தேவதைகளை யுபாசித்தல் கூடாதெனின், எல்லாத்தேவதைகளும் ஒவ்வொருபிரகரணத்தில் நிந்திக்கப்படுவதனால் எல்லாத்தெய்வங்களையும் உபாசியாமல் தள்ளிவிடவேண்டிவரும்.

[குறிப்பு.—ஒரு தெய்வத்தையே பரம உத்கிருஷ்டமாய்க் கொண்டாடி யுபாசிக்கவேண்டுமேயன்றிப் பலதெய்வங்களைத் தொழக்கூடாதென்பதும், பலதெய்வங்களைத் தொழுவதனால் மனம் நிலைப்பட்டு நல்வழிசேராதென்பதும், எந்தத்தெய்வத்தை யெவன் உபாசிக்கின்றானோ அவன் அதையே பெரிதாகக்கொண்டு, அதனைவிடமேலான தில்லையென்றுநம்பிப் பல

தெய்வங்களை யுபாசியாதிருக்கவேண்டு மென்பதும் கருத்தாகும்; தெய்வங்களைத் தூஷிக்க வேண்டுமென்பது கருத்தன்று; சிவனையுபாசித்தாற் சிவனையே யுபாசியுங்கள்; விஷ்ணுவை யுபாசித்தால் விஷ்ணுவையே யுபாசியுங்கள்; இருவரையுமுபாசிப்பது முடியாது; இரண்டு எஜமான்களுக்கு உத்திரவு சொல்வது கஷ்டமாம்; ஒருவரை யுபாசிப்பதனால் மற்றவரை நிந்திக்கவேண்டாம்; துதியும்வேண்டாம் நிந்தையும் வேண்டாம், உங்களுக்கு எந்தத் தெய்வம் இஷ்டமோ அதனைத் துதியுங்கள்; மற்றதை நிந்தியாதிருங்கள். சிவனைப் பூஜிப்பவர் விஷ்ணுவை நிந்தித்தாற் சிவபூஜையின் பயன் வியர்த்தமாகும்; இவ்வாறே விஷ்ணுவைப் பூஜிப்பவர் சிவனை நிந்தித்தால் விஷ்ணுபூஜையின் பயன் வியர்த்தமாகும். என்னையெனின், புராணங்களின் உத்தேசமானது ஒரே தெய்வத்தினிடத்துப் பக்தியுண்டாக்குவதேயன்றி மனத்திற் சாந்தசமத மாதிகுணங்களுக்குப் பதிலாக வைஷம்யத்தையும் (விரோதத்தையும்) காமக் குரோதாதி வைரிக ளறுவரையு முண்டாக்குவதன்று. நன்குய்க்கவனியுங்கள்.—தி. அ. ஸ்வா.]

'அக்கிஹோத்திரம்' * செய்வதற்கு வேதத்தில் இரண்டு காலங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன—ஒன்று சூரிய உதயத்திற்கு முன்னும் மற்றது பின்னுமாம். முற்காலத்தைப்பற்றிச் சொல்லும்பொழுதுசூரியஉதயத்திற்குப்பிறகு செய்தல் கூடாதென்றும் அதற்கு முந்திச் செய்வதே நன்மையென்றும் சொல்லப்பட்டிருக்கின்றது. மறுபடி சூரிய உதயத்திற்குப் பிறகு அக்கிஹோத்திரம் செய்வதைப்பற்றிச் சொல்லுமிடத்து இதுவே சிரேஷ்டமெனப்படுகின்றது. இரண்டு காலங்களு மிவ்வாறு நிந்திக்கப்பட்டிருப்பதனால், அக்கிஹோத்திரத்தைச்செய்யாது விடவேண்டுமென்பது இந்த நிந்தையின் கருத்தாகுமோ? ஆகாது; நித்திய கர்மத்தை விடலாகாது முற்காலத்தின் ஸ்துதியின் பொருட்டுப் பிற்கால நிந்தையும், பிற்கால ஸ்துதியின் பொருட்டு முற்கால நிந்தையும் செய்யப்பட்டிருக்கின்றன. இதுபோல, ஒரு தெய்வத்தி னுபாசனுப் பிரசங்கத்தில் இதர தேவதையின் நிந்தைக்குத் தாற்பரியம் அத்தெய்வத்தின் சிறப்பே தவிர, இதர தெய்வத்தின் நிந்தையன்று.

அவரவர் சார்ந்திருக்கும் வேதசாகைகளின் பேதத்தினால் சிலர் உதயத்திற்குமுன் ஹோமஞ்செய்கின்றார்கள்; சிலர் சூரிய உதயத்திற்குப்பின் செய்கின்றார்கள். இவ்விருதிறத்தாருக்கும் பயனொன்றேயாம். இதுபோல, இச்சாபேதத்தினால் விஷ்ணு, சிவன், கணேசன், தேவீ, சூரியன் ஆகிய ஐந்து தேவதைகளுக்குள் எதை யுபாசித்தபோதிலும் பிரம்மலோகமே யதன்பயனாகும். அவ்வுலகத்தில் இந்தக் கர்மப் பயன்களை யநுபவித்த பிறகு 'விதேகமோக்ஷம்' * சித்திக்கும். விஷ்ணு முதலிய தேவதைகளி னுபாசனையினால் வைகுண்டம் முதலிய வுலகங்களடையப்படுமென்று புராணங்கள் சொல்லுகின்றனவே யொழிய பிரம்மலோகம் சித்திக்குமென்று சொல்லவில்லை. ஆயினும், உத்தமமான உபாஸகர்கள் விதேகமுக்திக்கு அதிகாரிகளாயிருப்பதனால் 'தேவயான'†

* வைதிகப்பிராமணர்கள் செய்யும் அக்கிபூஜை. அரசங் குச்சி முதலான ஸமித்துக்களினால் அக்கினியை வளர்த்து நெய், அன்னம் முதலியவைகளை ஆஹுதிசெய்தல் (அக்னிக்களித்தல்).

* தேகத்தை விட்டபிறகு மோக்ஷம்; இதற்கு எதிர்மறை "ஜீவன்முக்தி."

† சூரியமண்டலத்தைப்பேதித்துக்கொண்டு பிரமலோகத்திற்குப்போதல் 'தேவயான'மாம். இது 'அர்ச்சி'மார்க்கமென்றுஞ் சொல்லப்படும். சந்திர மண்டலத்தைப் பேதித்துக் (பிளந்து) கொண்டு இந்திரலோகத்தின் வழியாய்ப் பிரம்மலோகத்திற்குப் போதல் 'பிதுர்யான'மாம். இது 'தூமமார்க்க' மென்றுஞ் சொல்லப்படும். அடிக்கடி ஜனனமரணத்திற்குக் காரணமான 'யம' லோகத்திற்குப்போதல் 'ஜாயஸ்வம்ரியஸ்வ' மார்க்கமாம். பிரம்மஞானம் பெறுதல் மோக்ஷமார்க்கமாம்.

மார்க்கத்தின் மூலமாய்ப் பிரம்மலோகத்திற்கே போகின்றார்கள். ஆனால், ஒரேபிரம்மலோகமானது விஷ்ணுவுபாஸகனுக்கு வைகுண்ட ரூபமாகவும், அங்குள்ளவர்கள் நான்கு புயங்களோடு கூடியவர்களாகவும் காண்கின்றது ; தானும் நான்கு புயங்களுடையவனாகின்றான். இப்படியே, சிவோபாஸகனுக்கு அது சிவலோகமாகவும் அங்குள்ளோர் முக்கண்படைத்தோராகவும் காண்கின்றது. தானுமப்படியே யாகின்றான். இவ்விதமாக எல்லா உபாஸகர்களுக்கும் அவரவர்களுடைய உபாஸ்ய ஸ்வரூபத்திற்குத் தகுந்தபடி அந்தப் பிரம்மலோகமானது காணப்படுகின்றது. ஏனெனின், தேவயான மார்க்கமின்றி, பிதுர்யானம், ஜாயஸ்வ ம்ரியஸ்வம் என்னுமிரண்டு மார்க்கங்களிலும் போகிறவர்கள் மறுபடி சம்சாரத்துன்பத்திற்குள்ளாகிக் கடைசியாய்ப் பிரம்மலோகஞ் சேருவரென்பதும், தேவயான மார்க்கமொன்றே நேராய்ப் பிரம்மலோகத்திற்குப்போவதென்பதும் சித்தாந்தமாம். ஆகையால் விதேகமோக்ஷத்திற்கு உரியவர்களான உபாஸகர்களெல்லாரும் பிரம்மலோகத்திற்குப்போகின்றார்கள். இந்தப்பிரம்மலோகத்தின் மகிமையினால் உபாஸகனுடைய இச்சாநுசாரமாகச் சகலசாமக்கிரிகளும் அவனுக்கு அங்கே புலப்படுகின்றன. இவ்விதமாக, ஐந்து தேவதைகளின் உபாசனைக்கும் பயன் ஒன்றேயாம்.

ஐந்து தேவதைகளுக்கும் நாமரூபங்கள் (பேரும் உருவமும்) வெவ்வேறாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றனவே ; ஈசுவரன் ஒருவனன்றோ ? ஒரு ஈசுவரனுக்குப் பல உருவங்களிருக்கமாட்டாவே, யெனின் — பாரமார்த்திகத்தில் (உண்மையில்) பரமாத்மாவுக்குப் பெயருமில்லை, உருவமுமில்லை. மந்தபுத்தியுள்ளவர்கள் உபாசித்துக் கடைத்தேரும் பொருட்டு நாமரூபங்களில்லாத பரமாத்மாவுக்கு நாமரூபங்கள் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால், ஒரேபரமாத்மாவினிடத்து, மாயையினாற் கற்பிக்கப்பட்ட நாமரூபங்கள் அநேகமுண்டாகின்றன. இவ்விதமாக, புராண வாக்கியங்களில் தோற்றுகின்ற விரோதங்கள் யாவும் நிவர்த்தியாகின்றன.

மேற்கூறிய சங்கைக்கு மற்றொரு முக்கிய சமாதானமுண்டு,—விஷ்ணு, சிவன், கணேசன், தேவீ, சூரியன்முதலிய ஒவ்வொரு பெயரும் காரணப்பிரம்மத்தைக் குறிக்கின்றது இதே பெயர்கள் காரியப்பிரம்மத்தையும் குறிக்கும். மாயாவிசிஷ்ட (மாயையுடன் கூடிய) காரணத்தைப் பிரம்மமென்கிறார்கள் ; அதன் காரியமாகிய ஹிரண்யகர்ப்பத்தை (பொன் அண்டத்தை)யும் பிரம்மமென்கிறார்கள். இவ்விதமாக விஷ்ணு, சிவன் முதலிய பதங்கள் வித்தியாசமின்றிக் காரணப் பிரம்மத்திற்கும் காரியப் பிரம்மத்திற்கும் உபயோகப்படலாயின. இவற்றிற்கு, நாராயணன், நீலகண்டன், விக்கினேசன், சக்தி, பானு என்பவை முதலாக அநேகப்பிரதிபதங்களுண்டு. இவற்றைச் சந்தர்ப்பங்களுக்குத் தகுந்தபடி காரணப் பிரம்மத்திற்கேனும் காரியப்பிரம்மத்திற்கேனும் உபயோகிக்கவேண்டும். உதாரணம்—'ஸைந்தவம்' என்றால் குதிரைக்கும் உப்புக்கும் அர்த்தமாகும். போஜன சமயத்தில் 'ஸைந்தவம்' என்றால் உப்பையும், நடக்குஞ் சமயத்தில் அதே பதம் குதிரையையும் குறிக்குமன்றோ? இதுபோல, வைஷ்ணவ புராணத்தில் 'விஷ்ணு,' 'நாராயணன்' முதலியபதங்கள் காரணப்பிரம்மத்தையும், 'சிவன்' 'கணேசன்' முதலியபதங்கள் காரியப் பிரம்மத்தையும் போதிக்கும்.

ஆகையால், வைஷ்ணவக்கிரந்தத்தில் விஷ்ணுவின் துதிக்கும் சிவாதிகளின் நிந்தைக்கும் அபிப்பிராயமென்னவெனின், காரணப்பிரம்மம் உபாசிக்கத்தக்கது ; காரியப்பிரம்மம் உபாசிக்கத்தக்கதன்று என்பதாம். ஸ்கந்தபுராணம் முதலிய சைவக் கிரந்தங்களில் 'சிவன்' 'மகேசன்' முதலிய பதங்கள் காரணப் பிரம்மத்தையும், 'விஷ்ணு' முதலிய பதங்கள் காரியப் பிரம்மத்தையும் போதிக்கின்றன. இப்படியே எல

லாப்புராணங்களிலும் காரணத்தின் ஸ்துதியும் காரியத்தின் நிந்தையும் காணப்படுகின்றன. சகல புராணங்களும் ஒரேகாரணப்பிரம்மத்தினுபாசனையைப் போதிக்கின்றன. ஒன்றுக்கொன்று சற்றேனும் விரோதமில்லை.

## வேதாந்தம்.

### II

வேதாந்தத்தைப்பற்றிப் பேசப்புகுவோர் இரண்டு சமாசாரங்களை முன்னராக அறியவேண்டும். அதிலொன்று வேதாந்தபாடசாலைகளுக்கெல்லாம் பொதுவாயுள்ள ஆத்தும தத்துவ லட்சணம். மற்றொன்று அண்டகோசசாஸ்திரத்துக் கடுத்த இலட்சணம். இக்காலத்திலுள்ள சாஸ்திரங்களில் அதிசயிக்கத்தக்க விதமாய்ப் புதிதாக அனேக நூதனங்கள், மேகத்திலிருந்து இடி முழங்குவதுபோல, ஒன்றன்பின் னொன்றாய்க் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. நீங்கள் கனவிலும் எண்ணியிராதபுதுபுது ஆச்சரியங்களெல்லாம் உங்கள் கண்களால் இன்றைக்கும் பார்க்கிறீர்கள். 'சக்தி' என்று சொல்லுவதை மனிதர் வெகுநாளைக்குமுன்பாகவே கண்டுபிடித்திருந்தனர். ஆனால் கொஞ்சகாலத்துக்கு முன்பாகத்தான் பற்பலசக்திகளும் ஐக்கியமாகி ஒன்றில் முடிகிறதென்று மனிதருக்குத் தெரியவந்தது. உஷ்ணமென்று சொல்லுவதும், காந்தக்கவர்ச்சியென்று சொல்லுவதும், மின்சாரமென்று சொல்லுவதும் எல்லாவற்றையும் ஒரே சக்தியாய் மாற்றிவிடலாமென்று மனிதர் இப்போதுதான் கண்டுபிடித்திருக்கின்றனர். ஆகையால் இவை யெல்லாவற்றையும் பெயர் என்ன வைத்துக்கொண்டாலும் ஒரே சக்திதானென்று சொல்லுகின்றனர். சம்ஹிதை எவ்வளவு மூந்தியகாலத்ததா யிருந்தபோதிலும் அதிலும் இதுதான் சொல்லப்பட்டிருக்கிறது. எவ்விதச் சக்திகளும், அதாவது பூமையக்கவர்ச்சியும், ஒன்றையொன்று இழுத்துக்கொள்ளும் சக்தியும், விலக்கும் சக்தியும், உஷ்ணம், மின்சாரம் அல்லது காந்தக்கவர்ச்சி முதலியவைகளாய் மாறினபோதிலும் இவையெல்லாம் ஒன்றே தவிர வேறில்லை. அந்தக்கரணத்திலிருந்து உற்பத்தியாகிறவைகள் எண்ணமாக மாறியபோதிலும், மனிதருக்குள்ளிருக்கும் தத்துவங்களுக்கெல்லாம் ஒரே கருவிதானுண்டு. அவைகளெல்லாம் உற்பத்தியாவது "பிராணன்" என்று சொல்லப்படுவதிலிருந்துதான். ஆனால் 'பிராணன்' என்பதென்ன? பிராணன் என்பது 'ஸ்பந்தனம்' அல்லது சலனம். இப்பிரபஞ்சமுழுவதும் முதலிலிருந்த நிஸ்திக்கே மறுபடியும் வந்துவிட்டால் பிறகு ஆதியந்தமில்லாத இந்தச்சக்தி என்னவாகிறது? இஃது ஒன்றுமில்லாமல் நசித்துப்போகிறதா? இல்லை யென்பதற்குச் சந்தேகமில்லை. இது நசித்துப்போய்விட்டால் பிறகு அடுத்தது எவ்வாறுண்டாகும். இதன் சலனம் அலைகளின் சலனத்தைப்போலவே ஏறுவதும் குறைவதும், திரும்ப ஏறுவதும் குறைவதுமாயிருக்கிறது. இவடத்தில் 'சிருஷ்டி' என்னும் பதம் பிரபஞ்சத்தைக்குறிப்பதற்காக உபயோகப்படுத்தப்பட்டிருக்கிறது. இந்தவார்த்தையைக் கவனித்துக்கொள்ளுங்கள். 'பிறப்பிக்கப்பட்டது' என்னும் பதம் உபயோகிக்கப்படவில்லை. நான் பேசும்போது ஸம்ஸ்கிருதபதங்களை மொழிபெயர்த்துச் சொல்லவேண்டியிருக்கிறதாகையால் சரியான பதங்களை உபயோகிக்க முடியவில்லை. அதில் உபயோகப்படுத்தியிருக்கும் பதம் யாதெனில் 'சிருஷ்டி' அல்லது 'ஏற்பாடுபண்ணுதல்' ஒவ்வொன்றும் வரவர அதிக மெல்லியதாய், முதலில் எதிலிருந்து உற்பத்தியாயிற்றோ அந்த ஸ்திதிக்கு வந்து, அதே ஸ்திதியில் கொஞ்சகாலம் அமைவாயிருந்து பிறகு திரும்ப ஜனிப்பதற்குத் தயாராய்வருகிறது. அது தான் 'சிருஷ்டி' அல்லது 'ஏற்பாடுபண்ணுதல்' என்று சொல்லப்படுவது. "பிராணன்" முதலிய இவ்வெல்லாச் சக்திகளும் கடைசியில் எவ்வாறுகின்றன? இவையெல்லாம் ஆதியிலி

ருந்ததுபோலவே 'பிராண'த்தின் தன்மையை யடைந்து பிறகு இந்தப்பிராணன் அசைவற்றதாய் விடுகிறது. ஆனால் முற்றிலும் அசைவற்றதாகிறதில்லை. அனேகமாய் அசைவற்றதாகிறது. இது தான் சூக்தத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. "அது சலனமில்லாமல் சலனத்தை யடைந்தது" ஆநீதவாதம், உபநிஷத்தில் நாம் அறிந்துகொள்ளுவதற்கு வருத்தமாகிய கிரந்தங்கள் அனேக மிருக்கின்றன. அதிலும் விசேஷமாய்ப் பரிபாஷையான வாக்கியங்கள், பதங்கள், இவைகளை யறிந்துகொள்ளுவது வருத்தம். திருஷ்டாந்தமாக "வாயு" என்னும் பதத்திற்கு அசைதல் என்று அர்த்தம். அனேக விடங்களில் அதற்கு ஆகாயமென்றும் இன்னு மனேக விடங்களில் சலனம் என்றும் அர்த்தம் ஆகிறது. ஜனங்கள் ஒன்றுக்கொன்று வித்தியாசம் தெரிந்துகொள்ளத் தெரியாமல் தடுமாறுகிறார்கள் இதைப்பற்றி நாம் ஜாக்கிரதையாயிருக்கவேண்டும். "அஃது அந்த உருவத்தை யடைந்திருந்தது." நீங்கள் 'சத்து' என்று சொல்லுவது எவ்வாறு மாறுகிறது? சக்தி என்று நாம் முன்னுரைத்தவைகள் சத்துக்குள்ளெல்லாம் ஊடுருவிச்சென்று ஆகாய நுண்ணணுவாகமாறி அதிலிருந்து மறுபடியும் வெளியே வருகின்றன. இவ்வாறு முதலில் வெளியேவருவது ஆகாசம் என்று சொல்லப்படுவது. இதை நீங்கள் ஆகாய நுண்ணணுவென்று சொன்னாலும், அல்லது வேறு எதுவென்று சொன்னாலும் சத்துக்கு ஆதிகாரணம் ஆகாசந்தானென்று தெளிவாகிறது. இந்த ஆகாசம் பிராணத்தின் பலத்தினால் சலனத்தை யடைகிறது. அடுத்த சிருஷ்டி உண்டாகும்போது சலனம் அதிகரித்து ஆகாசமானது சூரியனென்றும் சந்திரனென்றும், கிரகங்களென்றும் பலவாறான ரூபத்தை யடைகிறது.

யதிதம் கிஞ்ச ஜகத் சர்வம் ப்ராண இஜதி நிச்ருதம்.

மறுபடியும் "இப்பிரபஞ்சத்தில் ஒவ்வொன்றும், பிராணமானது சலனத்தை யடைவது பற்றி உற்பத்தியாயிருக்கின்றது" என்று சொல்லப்பட்டிருக்கிறது. யஜதி என்னும் வார்த்தையை நீங்கள் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும்; ஏனெனில் அது யஜ= அசைதல் என்னும் பதத்திலிருந்து வந்திருக்கிறது. நிச்ருதம்=உற்பத்தி செய்யப்பட்டிருக்கிறது; யதிதம்கிஞ்ச=இப்பிரபஞ்சத்தில் எதுவும்.

இஃது அண்டகோச சாஸ்திரத்தினோர்பாகம். அதிலனேக சமாசாரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. திருஷ்டாந்தமாக ஒன்றன்பின் னொன்று எவ்வாறு உண்டாகிற தென்பதைப் பற்றியும் முதலில் ஆகாசம் எப்படியிருக்கிறது; ஆகாசத்திலிருந்து மற்றவஸ்துக்கள் எப்படி உண்டாகின்றன; ஆகாயம் முதலில் எவ்வாறு சலனத்தை யடைந்து, அதிலிருந்து வாயு உற்பத்தியாகிறது, என்பவைகளைப் பற்றியும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் இதன் முக்கியக்கருத்து சூக்ஷ்மமான வஸ்துக்களிலிருந்து தான் ஸ்தூலவஸ்துக்கள் உற்பத்தியாகின்றன வென்பதுதான். ஸ்தூலவஸ்துக்கள் தான் எல்லாவற்றிற்கும் கடைசியாகஉற்பத்தியாவதுமன்றி வெளியுலகத்துக்குஅதிகமாய்ச்சம்பந்தப்பட்டவைகள். இவ்வஸ்து ஆதியில் நேர்த்தியான (சூக்ஷ்ம) வஸ்துவிலிருந்து தான் உற்பத்தியாயிற்று. இருந்தாலும் வஸ்துக்கள் அனைத் இரண்டாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றனவேயன்றி அதில் இன்னும் ஏகஐக்கியத்தைக் கண்டுபிடிக்கவில்லை. சக்திக்கெல்லாம் ஐக்கியம் பிராணனென்றும், சத்துக்கெல்லாம் ஐக்கியம் ஆகாசமென்றும் பெயர். இவ்விரண்டில் மறுபடியும் ஐக்கியத்தைக் கண்டுபிடிக்கலாமா? அவைகளை ஒன்றாக மாற்றமுடியுமா? நம்முடைய தற்காலத்துச் சாஸ்திரங்கள் இதைப்பற்றி ஒன்றும் சொல்லவுமில்லை, இதைக் கண்டுபிடிக்க முயலவு மில்லை. இதைக் கண்டு பிடிக்க வேண்டுமானால் முன்னே பிராணத்தையும் ஆகாசத்தையும் எவ்வாறு படிப்படியாய்க் கண்டறிந்தனரோ அவ்வாறே கண்

டறியவேண்டும். இவ்விரண்டும் ஒன்றாய்ச் சேருவது எதிலென்றால், ஆத்துமதத்வசாஸ்திர்த்தில் மஹத் என்று சொல்லப்படுபவரும் பூர்வகாலத்தில் பிரம்மாவென்றும் நான்முகப் பிரமனென்றும் சொல்லப்படுபவருமாகிய சர்வவிபாபகரும் அருபியுமாயுள்ளவரில் தான். இதில்தான் அவ்விரண்டும் ஒன்றாய்ச் சேர்கின்றன. உன் மனது என்று சொல்லப்படுவது, உன் மூளையாகிய வலையில் பிடிபட்ட இந்த மஹத்தின் ஒரு பாகந்தான். மஹத் என்னும் வலையில் பிடிபட்ட உங்கள் மூளைமுழுமையும் சேர்த்துத்தான் சமஷ்டி என்று சொல்லுகிறீர்கள். அங்வயம் இன்னும் செய்யவேண்டியிருந்தது. அது இன்னும் பூர்த்தியாகவில்லை. இவ்வாறு அர்வயம் செய்துபார்த்தால், நாம் ஒவ்வொருவரும் ஒரு சிற்றண்டமாகிறோம். உலகமுழுதும்சேர்த்துப்பார்த்தால் பிரமாண்டமாகிறது. ஆனால் 'வியஷ்டி'யில் என்னவிருந்தபோதிலும், வெளியிலும் அதேமாதிரியாக ஒவ்வொன்றும் சம்பவிக்கிறதென்று நாம் திடமாய் ஊகித்துக்கொள்ளலாம். நம்முடைய மனத்தை அன்வயப்படுத்துவதற்கு நமக்குச் சக்தியிருந்தால், அதேமாதிரியாகவே நம்முடைய மனதிலும் ஒவ்வொன்றும் சம்பவிக்கின்றதென்று ஊகித்துக்கொள்ளலாம். இந்த 'மனது' ஆவது என்ன என்னும் வினவுக்கு விடைபகரவேண்டும். தற்காலத்தில் மேற்றேயங்களில், சகலசாஸ்திரம் மிக்க அபிவிருத்தியையடைந்து வருவதாலும், அங்கஜீவசாஸ்திரம் படிப்படியே, முற்காலத்து மதங்களுக்குரிய கோட்டைகளை ஒன்றன்பின் னொன்றாக ஜயித்துக்கொண்டு வருவதாலும், அத்தேயத்தாருக்கு எங்கு நிற்கவேண்டுமென்ற நிலைமை தெரியாது. ஏனெனில் தற்காலத்திது அங்கஜீவசாஸ்திரம் ஒவ்வோரிடத்திலும் மனத்தையும் மூளையையும் ஒன்றாக்கி யிருப்பதனல் அவர்களுக்கு நம்பிக்கையின்மையை உண்டாக்கிவிட்டது. ஆனால் இந்தியாவிலுள்ள நமக்கோ அஃது எப்போதுந் தெரிந்த விஷயம். இந்துக்களுக்குள் ஒவ்வொரு பையனும் முதன் முதலிற் கற்றுக்கொள்ளும் தாத்பர்யம் யாதெனில் 'மனதும் ஜடபதார்த்தந்தான் ஆனால் அதைப்பார்க்கிலும் அதிக நேர்த்தியானது' என்னும் விஷயமே. சரீரம் முரணானது. சரீரத்துக்குப் பின்னால் நாம் 'சூக்குமசரீரம்' என்று சொல்லுகிற நேர்த்தியான சரீரம் அல்லது மனம் என்பது இருக்கிறது. இதுவும் ஜடபதார்த்தந்தான். ஆனால் அதைக் காட்டிலும் அதிக நேர்த்தியானது. 'ஆத்மன்' என்பது அதுவன்று. இவ்வார்த்தையை உங்களுக்கு இங்கிலீஷில் மொழிபெயர்த்துச் சொல்லமாட்டேன். ஏனெனில், ஐரோப்பாவில் இவ்வெண்ணம் குடிகொள்ளவேயில்லை. அப்பதம்மொழிபெயர்க்கக்கூடாததாயிருக்கிறது. ஜெர்மானியா தத்துவசாஸ்திரிகள் 'ஆத்துமன்' என்னும் பதத்தை 'சுவயம்பு' என்று மொழிபெயர்க்க முயலுகிறார்கள். அவ்வார்த்தையை உலகமுழுதும் யாவரும் அங்கீகரிக்கும் வரையிலும் நாம் உபயோகிக்க முடியாது. ஆகையால் அதைச் 'சுயம்பு, என்று சொன்னாலும், வேறு எதுவென்று சொன்னாலும், அது தான் நமது 'ஆத்மன்'. இந்த 'ஆத்மன்' தான், நமது கண்ணுக்குப் புலப்படாத உண்மையான மனிதன். 'ஆத்மன்' தான் சடத்துக் கடுத்தமனத்தை தன்னுடைய கருவியாகவும், தன் அந்தக்கரணமாகவும் உபயோகிக்கிறது. மனம் என்பதற்கு ஆத்தும தத்துவசாஸ்திரத்தில் கூறியிருக்கும் சரியான பதம் 'அந்தக்காணம்'. மனமானது, உள்ளிருக்கும் அனேக உறுப்புகளின் மூலமாய், வெளியில் நமக்குப் புலப்படும் தேகத்துக்குரிய உறுப்புக்களை வேலைசெய்விக்கிறது. இந்த மனம் யாது? கொஞ்சகாலத்துக்கு முன்பு தான் மேன்னாட்டிலுள்ள தத்துவசாஸ்திரிகள், கண்கள் உண்மையாகவே பார்ப்பதற்குறிய இந்திரியங்களல்லவென்றும், அவைகளுக்குப் பின்னால் வேறு சில இந்திரியங்களிருக்கின்றன வென்றும், இவைகளை நாசஞ்செய்துவிட்டால், ஒரு மனிதனுக்கு இந்திரனைப்போல் ஆயிரங்கண்களிருந்தபோதிலும் அவற்றாற் பார்க்க முடியாதென்

றும் தெரிந்துகொண்டனர். நம்முடைய தத்துவசாஸ்திரமோ 'திருஷ்டி என்றால் வெளி திருஷ்டியல்ல' என்னும் எண்ணத்திற்றான் ஆரம்பிக்கிறது. உண்மையான திருஷ்டி உள்ளுறுப்புக்களைச் சேர்ந்தது. மூளை உள்ளேயே ஒன்றாய்ச் சேர்கிறது. நீங்கள் அவைகளை எவ்வாறழைத்தாலும் இந்திரியங்களென்பது கண்கள், மூக்குகள், காதுகள் ஆகிய இவைகளல்ல. இவ்விந்திரியங்கள் எல்லாவற்றையும் சேர்த்து, அவைகளுடன், மனசு, புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய இவைகளைக் கூட்டினால் மனம் என்று சொல்லப்படுகிறது. தற்காலத்து அங்கஜீவசாஸ்திரி, 'மனம்' என்று சொல்லப்படுவதுதான் மூளையென்றும், அநேக உறுப்புக்கள் சேர்ந்துதான் மூளை உண்டாயிருக்கிறதென்றும் உங்களுக்குச் சொல்லவந்தால், நீங்கள் கொஞ்சமேனும் பயப்படாமல், உங்களுடைய தத்துவசாஸ்திரிகளுக்கு அஃது எப்போதுந் தெரிந்தவிஷயமென்று உத்தரஞ் சொல்லுங்கள். அஃது உங்களுடைய மதத்திற்கு ஆதியக்ஷரம்.

நாம் இப்போது 'மனசு' 'புத்தி' 'சித்தம்' 'அகங்காரம்' என்பவைகளுக்கு அர்த்தம் என்னவென்றறியவேண்டும். முதலாவது 'சித்த' மென்பதிருக்கட்டும். அது மனத்தில் திணிக்கப்பட்டிருக்கிறது. மனத்துக்கும் அதன் பற்பல நிலைமைகளுக்கும் பொதுவான பெயர் மஹத். அதன் ஒரு பாகம் சித்தம். கோடைகாலத்தி னொருநாள் மாலையில், சாந்தமும், அமரிக்கையும் பொருந்தியதும், மேற்றரையில் யாதொரு அலையுமில்லாத ஓர் ஏரி இங்கிருப்பதாக நினைத்துக்கொள்ளுங்கள். இதை நாம் சித்தமென்று சொல்லிக்கொள்ளுவோம். இவ்வேரியில் யாரேனு மொருவர் ஒரு கல்லை எறிவதாக நினைத்துக்கொள்ளுங்கள். பிறகு என்னநேரிடுகிறது? முதலாவது, தண்ணீருக்குக் கொடுக்கப்பட்ட அடியாகிய ஒரு கிரியை உண்டாகிறது. பிற்பாடு தண்ணீர் உயரவெழும்பி, கல்லுக்குப் பிரதிகிருதியை அனுப்புகிறது. அந்தப் பிரதிகிருதியானது ஓர் அலை உருவமாக வருகிறது. முதலாவது தண்ணீர் கொஞ்சம் சலனத்தை யடைகிறது. உடனே, அலை ஸ்வரூபமாக பிரதிகிருதியைப் பின்னேடே யனுப்புகிறது. இந்தச் சித்தத்தை இவ்வேரியுடன் ஒப்பிடுவோம். வெளிவஸ்துக்கள் அதற்குள் ளெறியப்பட்ட கற்களுக்கு காப்பாகின்றன. அஃது இவ்விந்திரியங்களின்மூலமாய் யாதேனுமொரு வெளிவஸ்துவுடன் சம்பந்தப்படும்பொழுது (வெளிவஸ்துக்களை உள்ளே கொண்டுபோவதற்கு இந்திரியங்களிருக்கவேண்டும்) திடமற்ற மனமானது சலனத்தை யடைகிறது. பிறகு நிர்ணயப்படுத்தும் சக்தியாகிய புத்தி என்னும் பிரதிகிருதி உண்டாகிறது. இந்தப் புத்தியுடன் 'அஹம்' என்னும் எண்ணமும் வெளிவஸ்துவும் ஓடிவருகிறது. என் கையில் ஒரு கொசுவிருக்கிறதென்று நினைத்துக்கொள்ளுங்கள். இந்த உணர்ச்சி என் சித்தத்திற்குக் கொண்டுபோகப்படுகிறது. இஃது கொஞ்சம் சலனத்தை யடைகிறது. இது ஆத்தும தத்துவசாஸ்திரத்தில் சொல்லப்பட்ட மனம். பிற்பாடு பிரதிகிருதி யுண்டாகிறது. உடனே என் கையில் கொசுவிருக்கிறதென்ற வெண்ணமும் அதை நான் துரத்திவிடவேண்டுமென்ற எண்ணமும் உண்டாகிறது. இவ்விதமாகவே இக்கற்களும் ஏரியில் எறியப்பட்டன. ஆனால் ஏரியைத்தாக்கும் ஒவ்வொரு அடியும் வெளியுலகிலிருந்து வருகிறது. மனமாகிய ஏரிக்கோ அடிகள் வெளியுலகிலிருந்தும் வரலாம், உள்ளுலகிலிருந்தும் வரலாம். இதுதான் அந்தக்கரணமென்று சொல்லப்படுவது. அத்துவைத முறைமையின்னதென்று பின்னாலறியும்பொருட்டு, இத்துடன் இன்னொரு சமாசாரங்கூட நீங்களறியவேண்டும். அஃதென்னவெனில் நீங்கள் யாவரும் முத்துக்களைப் பார்த்திருக்கலாம். முத்துக்கள் எவ்வாறு செய்யப்படுகின்றனவென்று உங்களி லனேகருக்குத் தெரிந்திருக்கலாம். எரிச்சலை உண்டுபண்ணக்கூடிய யாதேனுமொரு நுண்பொடி அல்லது நுண்மணல் முத்துக்குத் தாயாகிய சிப்பியின் தேகத்தில் புகுக்

துகொண்டு அங்கே எரிச்சலையுண்டாக்கிய தன்மேல் அச்சிப்பியின் தேகமானது அவ்வெரிச்சலை எதிர்தாக்கி, அச்சிறிய நுண்ணணுவைத் தன்சொந்தசாரத்தினல் முடிவிடுகிறது. அது பளிங்குபோலாகி முத்தாகிறது இப்பிரபஞ்சமும் அதுபோலவேதான். பிரபஞ்சமானது நாம் உண்டுபண்ணிகொண்டிருக்கிற ஒரு முத்து. நமக்கு வெளியுலகிலிருந்து கிடைப்பதெல்லாம் அடிதான். அந்த அடி இன்னதென்று தெரிவதற்குக்கூட, நாம் பிரதிக்கிரியைசெய்து, பிறகு நமது மனத்தின் ஒரு பாகத்தை அடியின் விஷயமாய்த் திருப்பவேண்டியிருக்கிறது. அப்போது நாம் அதைப்பற்றி உண்மையாய் அறிவது யாதெனில், நம்முடைய மனத்துக்கு அடியானது ஒருவிசேஷ ஸ்வரூபத்தைக் கொடுத்திருப்பதை யறிகிறோம். ஆகையால் நாம் வெளியுலகத்தை 'ஏ' யாக நினைத்துக்கொண்டால், நமக்கு வாஸ்தவமாய் அதைப்பற்றித் தெரிவது "ஏ" என்பதும் மனமும் சேர்ந்திருப்பதுதான். இந்த உண்மை வெளியுலகத்தைத் திடமாய் நம்ப விரும்புவோர்க்குங்கூட நன்றாய்த் தெரிந்த விஷயம். அங்கஜீவசாஸ்திரம் பிரசித்தமாயிருக்குமிந்நாட்களில் அவர்கள் இதை ஒத்துக்கொள்ளாமல் முடியாது. இந்த மனமாகிய அம்சம், முற்றிலும் நமக்குத் தெரியாமலும், தெரியக்கூடாததுமாயிருக்கிற "ஏ" முழுவதையும் மறைத்துக்கொள்ளும் அவ்வளவு அதிகமாயிருக்கிறது. அதுபற்றி வெளியுலகமென்றொன்றிருந்தால் அது நமக்குத் தெரியாமலும் தெரியக்கூடாததாயுமிருக்கிறது. அதைப்பற்றி நமக்குத் தெரிவதெல்லாம், நமது மனம் அதற்கு ஓர் உருவத்தையும், ஒழுங்கையும், மாதிரியையும் அளித்திருப்பவாறுதான்; இதுபோலவே உள்ளுலகமும். நமது சொந்த ஆத்துமாவைப்பற்றி அறிவதற்கும் இதேவிதி பொருந்துகின்றது. ஆத்துமாவை யறியவேண்டுமானல், நாம் மனத்தின் மூலமா யறியவேண்டும். ஆகையால் ஆத்துமாவைப்பற்றி நமக்குச் சொற்பம் தெரிந்திருப்பது ஆத்துமாவும் மனமும் கூடியதுதான். அதாவது மனமானது ஆத்துமா முற்றிலும் பறவி, அதற்கு ஓர் உருவத்தையும் மாதிரியையும் கொடுத்திருப்பவாறே யறிகிறோமேயன்றி வேறொன்றுமில்லை. இதைப்பற்றிப் பிறகு பேசப்புகுவோம். ஆனல் அதை இவ்விடத்தில் ஞாபகம் வைத்துக்கொள்ளுவோம்.

---

## ஜனசமூகவிர்த்தியும் ஸ்திரீகளின் நிலைமையும்.

ஜனசமூகத்தில் ஸ்திரீகளின் நிலைமை யின்னதென்றும், ஜனசமூகவிர்த்தியின் பொருட்டுச் செய்யவேண்டிய முக்கியமான சீர்திருத்தம் இன்னதென்றும், ஹிந்துமதச் சார்பான சிந்தனையுள்ள, நண்பர் ஒருவர் விவேகசிந்தாமணியிற் பிரசுரிக்கவென்று ஒரு விஷயமெழுதி யனுப்பியுள்ளார். அதில் முதற்பாகம் இக்காலத்துச் சீர்திருத்தக்காரர்களின் கொள்கைகளைப்பற்றிச் சொல்வதாக விருக்கிறது. அது, எழுதினவர் அனுபவத்துக்கு ஒத்துள்ளதாயிருக்கலாமாயினும், நமது அபிப்பிராயத்தில் அத்தகையாரைச் சீர்திருத்தக்காரரென்றுரைப்பது சிறிதும் ஏற்காதென்று படுவதாலும் உண்மையான சீர்திருத்தக்காரர்கள் அனேகர் மெய்யாக உழைத்துவருகிற படியாலும் ஆக்ஷேபத்துக்கிடமானதும் அமுக்கியமானதுமான அந்தப்பாகத்தைத் தள்ளி எழுதியவர் சொந்த அபிப்பிராயத்தைத் தெரிவிக்கும் பின்பாகத்தைமட்டும் கீழே பிரசுரிக்கிறோம். ஜனசமூகச் சீர்திருத்தம் எல்லாரையும் பாதிக்குந் தன்மையதாகவிருத்தலால் எவ்வகையின ரபிப்பிராயமும் பிறரைப் பழிக்காத அளவிற்கு யாவராலும் செவிசாய்த்துக்கேட்கப்படத்தக்கதே யென்னும் தர்மவிதியை யனுசரித்து, நமது நேசரதபிப்பிராயத்தைச் சுயமாய் அவரெழுதியபடி கீழே பிரசுரிக்கிறோம்.

* * *

"நமது சுபாசுபங்களுக்கு நமது கர்மமே காரணமாகும்; கர்மத்துக்கு மூலம் நமது பிரவிருத்தியாகும்; மேலும் அனேக விஷயங்களில் நமது பிரவிருத்திக்கு மூலம் நமது மனைவியேயாவள். ஆகையால் பெண்பாலரே நமது சுபாசுபங்களுக்குக் காரணமெனக் கூறற்தகும். பெண்பாலரின் மகத்து

வத்தை எடுத்துரைக்குமிடத்து இவ்வாறெல்லாம் சொல்வது பழைமையான வழக்கமாதலின் யாமு மவ்வாறே சொல்லலுற்றோம். ஆயினும் இத்தகைய மொழிகளை வசனிப்போருடைய அந்தரங்கமான அபிப்பிராயமென்னவெனின், புருடரே மானுடச் சாதி யென்பதாம்; எது புருஷனுடைய சுபாசுப விதானத்தையும் விருத்தியையும் அடைவிக்குமோ அதுவே பெரியவிஷயம்; புருஷருடைய சுபாசுபங் களுக்கு ஸ்திரீகள் விதாயினிகளாயிருக்கின்றமை யால் அவர்களுடைய மேன்மை அல்லது தாழ்மை யொரு பெரியவிஷயமாய் ஏற்பட்டது. உண்மை யாய் யாம் இங்ஙனமுரைப்பவரல்லேம். எண்ணிக் கையில் ஸ்திரீகள் புருஷர்களுக்குச் சமானமானவர் களா யிருக்கின்றார்கள்; அதிகமானவர்களாயிருக் கின்றார்களென்றுஞ் சொல்லலாம்.

அவர்கள் மன்பதையின் அர்த்தலிங்கமானவர் களாயிருக்கின்றார்கள்; அஃதாவது ஜனசமூகத்தில் சரிபாதி அவர்களாயிருக்கின்றார்கள். ஆகையால் அவர்கள் புருஷர்களுடைய சுபாசுபங்களுக்குக் காரண பூதர்களாயிருந்தாலுஞ்சரி, இல்லாவிடினுஞ் சரி, அவர்களுடைய மேன்மை ஜனசமூகத்தின் பொது மேன்மையெனவே கொள்ளல்வேண்டும். புருஷர்களுடைய மேன்மை ஜனசமூகத்தின் மேன் மையென எவ்வாறு கொள்ளற்பட்டதோ அவ் வாறே ஸ்திரீகளின் மேன்மையும் ஜனசமூகத்தின் மேன்மை யெனக்கொள்ளற்பாடல்வேண்டும். என்னையெனின், முன்னருரைத்தவாறு பெண் பாலர் மன்பதையின் பாதியுடம்பாவர்; ஸ்திரீ புரு ஷர்களின் தொகுதிக்குச் 'சமூகமென்றும், சமாஜ மென்றும், மன்பதை யென்றும் பெயர். ஸ்திரீ புருஷர்கள் இருவர்களுடைய சமானமான மேன் மையை நாடுவதே மன்பதைச் சீர்திருத்தத்தின் முக் கியமான உத்தேசமாகும். இந்த மேன்மைக்குச் சககாரியான ஒரு பாகத்தின் மேன்மை கௌணோத் திசயமென (கௌரவார்த்தமாய் சும்மாசொல்லப் பட்டதுஎன) நினைப்பது நீதியின்தவறும். ஆயி னும் மன்பதை நியமனக்கர்த்தர்கள் (ஜனசமூகத் தின் நடவடிக்கைகளுக்கு விதிகளேற்படுத்துவோர்) எல்லாக்காலங்களிலும் எல்லாத்தேசங்களிலும் இந் தப்பிரமைக்குள்ளாயிருக்கின்றார்கள். ஸ்திரீகளின் விஷயத்தில் அவர்கள் வெகுகண்டிதமான விதிகளை யேற்படுத்தி அவற்றை யவர்களநுட்டிக் குமாறு செய்திருக்கின்றார்கள். ஸ்திரீகள் அவ்விதிகளை ஏன் அவ்வாறு ஆசரிக்கவேண்டுமெனின், அவர்கள் அவ் வாறு ஆசரிப்பதனாற் புருஷர்களுக்கு மங்கள சாத னமுண்டாகின்றதென்பதனாலாம். இந்த உத்தேசம் எல்லாவிடத்தும் பரவியிருக்கின்றது. சிலதேசங் களில் இவ்வபிப்பிராயம் வெளிப்படையாயும் சொல் லப்பட்டிருக்கின்றது. இந்தக்காரணத்தினாலேயே எல்லாவிடத்தும் ஸ்திரீகளுடைய பெண்டீர்மை யைக்குறித்துக் கண்டிதமான விதிகளேற்பட்டிருக் கின்றன. புருஷர்களிடத்து அதர்மம் சூன்யமாயி ருக்கின்றது; அதனை அபாவப்படுத்தியிருக்கின்றார் கள்; அவர்களுடைய அதர்மம் பெருந்தோஷமென எண்ணுவது எவ்விடத்துங்காணோம். இஃதிப்படி யிருக்கினும், நீதி சாஸ்திரங்களிலுள்ள இயற்கை யான விதிகளைப்பார்த்தால் இத்தகைய பக்ஷபாத மொன்றுமில்லை. ஸ்திரீயின் வியபிசாரத்தை விட புருஷனுடைய பரஸ்திரீ கிரஹணமானது குறைந்த தோஷமென்று எந்த நீதிசாஸ்திரமுஞ் சொல்ல வில்லை. அவையிரண்டும் சமானமான பாபமேயா கும். புருஷனையுடைய ஸ்திரீயின் விஷயத்தில் அந்தப் புருஷனுக்கு இயற்கையாய் எவ்வளவு அதி காரமுளதோ, ஸ்திரீயையுடைய புருஷன் விஷயத் திலும் அந்த ஸ்திரீக்கு அவ்வளவு அதிகாரமுளது; இதனிற் சற்றேனும் ஏற்றத்தாழ்வில்லை. இவ்வா றிருந்தும், புருஷர்கள் இவ்விதியை நிராகரித்தக்கால் அது பெரியமனிதருடைய தன்மை யெனக்கௌரவ மாய்க் கொண்டாடப்படுகின்றது. ஸ்திரீயானவ ளிந்த தோஷத்துக்கு உள்ளாவளேல் சம்சாரசுக மனைத்தும் அவளுக்குக்குன்றுவதேயன்றி அவள் அதமர்களிலும் அதமியாய் எண்ணப்படுகிறாள். ஜனங்கள் குஷ்டரோகியைத்தொட்டாலுந் தொடு வார்களேயன்றி யவளைத்தொடார். இவ்வளவு இழி வான நிலைமை யவளுக்கு வருவானேன். புருஷ னுடைய சுகத்திற்கு ஸ்திரீயின் பெண்டீர்மை அவ சியமென வெண்ணுதலினென்க. ஸ்திரீயினது சுகத்திற்காகப் புருஷன் இந்திரியசம்யமம் (இந்திரி யத்தைக் காப்பாற்றிக்கொள்ளல்) செய்யவேண்டி யது அவசியமன்றோ? ஆயினும் புருடரே மன்பதை யாவர், ஸ்திரீகள் ஒன்றிலும் சேர்க்கையில்லை என் றெண்ணுங் காரணத்தினால் ஸ்திரீயினுடைய கற் பின்மை மகாபாபமென்றும், புருஷன் பரஸ்திரீ யைக் கிரஹித்தல் தப்பென்றும் வழங்கப்பெறு கின்றது. ஸ்திரீயின் விஷயத்திலேற்பட்ட விதி புருஷன் விஷயத்திலும் அவ்வளவு கண்டிப்பா யிருக்குமாறு செய்வதே இக்காலத்தில் முக்கியமா யாகவேண்டிய மன்பதைச் சீர்திருத்தத்தின் முதன் மையான அம்சமாகும்."

## OOTACAMUND TEACHERS' ASSOCIATION.

### உதகமண்டலம் உபாத்தியாயர்களின் சங்கம்.

உதகமண்டலம் பஜார் முனிசிபல் பாடசாலையில் 1901-ளு மேமீ 21உ கூடிய உபாத்தியாயர்களின் சங்கத்தில் நடந்த நடவடிக்கைகள்.

**வந்திருந்தவர்கள்.**

மிஸ்டர் ஆர். சிவராம ஐயர் ... கோயமுத்தூர் - நீலகிரி ரேஞ்சு, சப்-அசிஸ்டெண்டு இன்ஸ்பெக்ட்டர்.

முனிசிபாலிடியிலுள்ள உபாத்தியாயர்களான மெம்பர்கள்.

இன்னும் 21-பேர்கள் (இடமின்மையால் இவர்கள் பேர்விலாசம் பிரசுரிக்கக்கூடவில்லை.)

லோகல் பண்டு போர்டு கிராம பாடசாலை உபாத்தியாயர்கள் 13-பேர்கள்.

**தீர்மானங்கள்.**

1-வது "உதகமண்டலம் உபாத்தியாயர்களின் சங்கம்" என்னும் ஒரு சங்கம் ஏற்படவேண்டியது.

2-வது அவ்வூரில் தகுந்த ஒரு பிரபுவை அவர் சம்மதம் தெரிந்துகொண்டு பிரெசிடெண்டாக நியமிக்கவேண்டியது.

3-வது மேட்டுச்சேரி செண்டு ஜோசப் லோயர் செக்கண்டெரி பாடசாலைத் தலைமை உபாத்தியாயர் மிஸ்டர் எம். எ. சாமிநாத ஐயரை வைஸ்பிரெசிடெண்டாக நியமிக்கவேண்டியது.

4-வது ஒத்லைத பஜார் முனிசிபல் பாடசாலைத் தலைமை உபாத்தியாயர் மிஸ்டர் ஆர். திம்மண்ணசாரியரையும், மேட்டுச்சேரி C. M. லோயர் செக்கண்டெரி பாடசாலை உதவி உபாத்தியாயர் மிஸ்டர் டி. எஸ். வில்லியம் என்பவரையும் காரிய தரிசிகளாக நியமிக்கவேண்டியது.

5-வது மாதத்திற்கு ஒருமுறை முதல் சனிக்கிழமை 3-மணிக்கு பஜார் முனிசிபல் பாடசாலையில் சங்கம் கூடவேண்டியது.

6-வது வித்தியா விஷயமாயும், சுகாதார விஷயமாயும் பிரசங்கங்கள் செய்யவேண்டியது.

7-வது அடுத்த மீட்டிங்கில் மிஸ்டர் எம். எ. சாமிநாத ஐயர் ஏற்றுக்கொண்ட சுகாதார விஷயத்தைப்பற்றிய உபந்நியாசம் நடத்தப்படும்.

8-வது ஒவ்வொரு சங்கத்திலும் நடக்கிற விஷயத்தைப்பற்றிய ரிபோர்ட் ஒன்று விவேகசிந்தாமணி எடிடர் அவர்களுக்குப் பத்திரிகையில் பிரசுரம் செய்யும்படி அனுப்பவேண்டியது.

9-வது மேற்கண்ட சங்கத்திற்குக் கிளையாக எடப்பள்ளி உபாத்தியாயர் சங்கமும் ஏற்படுத்தப்பட்டு எடப்பள்ளி போர்டு பாடசாலைத் தலைமை உபாத்தியாயர் மிஸ்டர் டி. சி. வெங்கிடரமண ஐயரை பிரெசிடெண்டாகவும், ஜெகதாரை போர்டு பாடசாலைத் தலைமை உபாத்தியாயர் மிஸ்டர் ராகவேந்திரராவைக் காரிய தரிசியாகவும், சமீபத்திலுள்ள போர்டு பாடசாலை உபாத்தியாயர்களை மெம்பர்களாகவும் நியமிக்கப்பட்டது.

(Signed.) R. SIVARAMA AIYAR,
*Chairman.*

---

## SIVAGIRI MONTHLY REPORT.

### சிவகிரி உபகாரசங்கம். 1901-ம் ளு ஏப்பிரல்மாதத்து ரிபோர்ட்டு.

இச் சங்கக் கமிட்டியால் ஏப்பிரல்மீ 5, 12, 19, 26-ந் தேதிகளில் மீட்டிங்குகள் கூட்டப்பட்டன.

இம்மீட்டிங்குகளிற் செய்யப்பட்ட உபந்நியாஸ விவரம்:—

1. ஆசையைப்பற்றி எழுதி வாசிக்கப்பட்டது.
2. வாலிபப்பழக்கத்தைப்பற்றி எழுதிவாசிக்கப்பட்டது.

3. சிறுவர்களை நடத்தும் முறையைப்பற்றி எழுதி வாசிக்கப்பட்டது.

4. 1901-ம்ஹு மார்ச்சுமீ¯த்து "விவேகசிந்தாமணி"யில் உள்ளவாலிபருக்கு புத்திமதிகள் என்னும் விஷயம் வாசிக்கப்பட்டது.

# சிறுவர்க்கான பக்கம்.

[விவேகசிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

## இராயர் அப்பாஜி கதை.

ஒரு நாள் பௌர்ணிமியாதலின் "கொற்ற வெண் குடையெனக் குளிர்வெண்டிங்கள்" நிர்மலமான ஆகாயத்தினிடத்து மேனோக்கித் தனது வெள்ளொளி பரப்பி வீசுவானாயினன். அதிதூவள்ளியமாய்த் துலங்குமவ் வெழிலோங்கு நிலவில் ஒரு சிறுதென்றலினிமையாய் கிருஷ்ணதேவராயர் பங்களாவில் ஜில்லென வடித்தது. இராஜா கிருஷ்ண தேவராயருக்கு இராஜ்யாதிகாரம் நடத்திய களைப்பினாலும், உத்தியோகஸ்தர்கள் பலர் நிறைவுற்றிருத்தலானும் காற்று சுகமாய் வீசுதலானும், பரிசுபெற பாடகனொருவன் வந்திருந்தமையானும், வேடிக்கையாய்ப் பாட்டுக் கச்சேரி யொன்று வைக்கப்பட்டது. பாடகன் புங்கானுபுங்கமாய் சங்கீதரசம் பொழியவே, பாலர் முதல் விருத்தர்வரை எல்லோரும் ஒருவர்தவறாது தலையாட்டின வண்ணமாயிருந்தனர்.

இதனைக்கண்ட அரசன் ஆனந்தபரிதனாய் மந்திரி அப்பாஜியை நோக்குற்று "அமைச்ச! நம்நாட்டில் எவ்வளவு ராகஞானஸ்தர்களுளர் பார்" எனவியந்து கூற, அதனை மந்திரி ஒப்புக்கொள்ளாது "மஹாராஜ்! இதில் ஞானஸ்தன் நூற்றிலொருவனிருப்ப தரிதென்றான்.

அரசன் அதை ஒப்புக்கொள்ளாமலிருக்கவே நிரூபிக்குமாறு மறுநாள் மேற்படி "பாட்டுக்கச்சேரி" வைத்திருப்பதாயும் அனைவோரும் அதற்கு வருதல்வேண்டுமெனவும் அப்பாஜி உத்திரவுசெய்துவிட்டு நேரேயுத்தசாலைக்குச் சென்று அவண் உள்ளபோர்வீரருக்கு மறுநாள் ஒவ்வொரு வீரனும் கேடயம் தாங்கிக்கொண்டு ஒவ்வொருவர் பக்கலிலும் நிற்க வேண்டியதெனவும் "ராகஞானஸ்தர்களை வெட்டு" என்றவுடன் வெட்டவேண்டாமெனவும் திட்டம் செய்துவிட்டு விடுதிசென்றனன்.

மறுநாள் முந்திய நாளைப்போலவே "சதுர்ஜமக்காளம்" விரித்திருப்ப எண்ணிறந்த கனவான்கள் எல்லோரும்வந்து அமர்ந்தனர். கூட்டம் ஏகமாயிருந்தது. ஒவ்வொருவர்பக்கலிலும் பள, பளென்று பகலவனைப்போற் பிரகாசிக்கும் பட்டாக்கத்தியேந்திய போர்வீரனொருவன் நின்றுகொண்டிருந்தனன்; பாட்டு ஆரம்பித்தது நல்லஸ்வாரஸ்யமான சமயத்தில் "ராகஞானஸ்தர்களை வெட்டு" என்றவுடன் அங்கிருந்தவர்களில் இருபது முப்பதுபேரைத் தவிர ஏனையோர் தடஸ்தமாய் நின்றுவிட்டனர். தேகஸ்மரணையின்றி அவ்வானந்தத்தால் "தலைபோகும்" என்ற பயமின்றி தலையாட்டிக் கொண்டிருக்கும் அவர்களை அப்பாஜி அரசனுக்குக்காட்டி "மஹாராஜ்! இவர்கள் தாம் ஞானஸ்தர்கள் பார்த்துக்கொள்ளுங்கள்" என்றான். அரசன் அமைச்சனின் சமர்த்தை மெச்சிக்கொண்டாடினன். சுபம்.—தெலுங்கிலிருந்த இந்தக்கதை எடுத்து இணைத்துக்கொள்ளப்பட்டது.

K. S. வைத்திநாதய்யர்.

## விவேகசிந்தாமணிப் பிரசுரங்கள்.

இவை ஒவ்வொன்றும் நாணயமான இங்கிலீஷ் பைண்டு செய்து கில்ட் எழுத்துகள் பதித்துள்ளன.

**மாக்ஷிமைதங்கிய இந்தியா சக்கிரவர்த்தினியாகிய விக்டோரியா மஹாராணியவர்கள் சரித்திரம்.** 27-படங்களோடும், இந்தியா கவர்ன்மெண்டு, 'இந்தியா ஆபீஸ்' இவைகளின் அமைப்பு, அமுல்செலுத்தும் முறை விவரங்களோடும் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. விலை ரூ. 1-4. V. P. P. ரூ. 1-8. அதிக கில்ட் கொடுத்தது ரூ. 1-6. V.P.P. ரூ. 1-10.

**புத்தரது திவ்விய சரித்திரம்.**—விலை அணு 14. V. P. P. ரூ. 1-2. அதிக கில்ட் கொடுத்தது : ரூ. 1. V. P. P. மூலமாக ரூ. 1-4.

**விவேகமஞ்சரி.**—புஸ்தகம் I. இதிலடங்கியவை : (1) கோல்பர்ட் சரித்திரம். (2) சத்தியதேவதைக்கதை. (3). சிவாஜிமஹாராஜா சரித்திரம். விலை அணு 14. V. P. P. ரூ. 1-2 அதிக கில்ட் கொடுத்தது : ரூ. 1. V. P. P. ரூ. 1-4,

இம்மூன்று புஸ்தகங்களும் கில்ட் எழுத்துகளின்றி காலிகோ கட்டடம்செய்து தனித்தனியாகவும் கிடைக்கும் :

(1) கோல்பர்ட் சரித்திரம் : துணிவியாபாரிகடையிலிருந்து முதல்மந்திரிஸ்தானத்துக்குவந்தவாலிபன்கதை. விலை அணு 5. V. P. P. அணு 8.

(2) சத்தியதேவதைகதை : விலை அணு 5. V. P. P. மூலமாக அணு 8.

(3) சிவாஜி மஹாராஜாசரித்திரம் : விலை அணு 6. V. P. P. மூலமாக அணு 9.

**ஆபத்துக்கிடமான அபவாதம் அல்லது கமலாம்பாள் சரித்திரம்.** விலை ரூ. 1-8. V. P. P. ரூ. 1-14. அதிக கில்ட் கொடுத்தது : ரூ. 1-12. V. P. P. ரூ. 2-2.

**விவேகரஸத்தாலாட்டு.** 6 பை. தபாற்கூலி 6 பை.

வேண்டுவோர் சென்னை திருவல்லிக்கேணி அ. ப. ஏஜன்ஸி, காரியதரிசி ஸி. வி. சாமிநாதய்யர் அவர்களுக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

### கமிஷனுக்கு விற்கப்படும் புஸ்தகங்கள்.

| | | |
|---|---|---|
| மாக்ஷிமைதவம் | ... ... | விலை அணு 5. |
| தினதபாலு... | ... ... | ,, ,, 8. |
| கல்வி விளக்கம் | ... | விலை ரூபா 1-0-0. |

தபாற்கூலி பிரத்தியேகம்.

*Apply to the D. K. Agency, Triplicane, Madras.*

## Photographs of Temples and Idols of Southern India.

*Hindu Temples:*—1. Srirangam, Saptaprakaram. 2. Conjeeveram, Varadarajaswami Temple. 3. Dakshana Badarikasramam or Melkota. 4. Somanadhapuram Temple. 5. Tanjore, Brihadiswaran Temple. 6. Tirukkudanthai or Kumbakonam, Sarangapani Temple. 7. Ghatikachalam or Sholingar: (i) Narasimhaswami Hill and (ii) Anjaneyaswami Hill. 8. Chidambaram, Nataraja Temple. 9 Madura Minakshi Temple, full view from Northern Street.

SIZE 12 in. by 14 in.

**Price Rs. 2, per copy, postage and V. P. Commission extra.**

*Perumals, &c:*—1. Varadarajaswami of Conjeevaram, Garudautsavam, Gopuradarsanam 2. The same with all the jewels on the Tiruvavataram day. 3. Perundevi Taver of Conjeeveram. 4. Tirunarayanapuram or Melkota. Chellapillai with all jewels and with Upayanachchiyar. 5. Tirumaliruncholai Perumal or Kallalagar, on the day of Chitrapournami, decorated as a robber. 6. The same, on the next day with Rajathirkkolam. 7. Mannargudi, Rajagopalan or Rajamannar, E'kanthasevai. 8. The same, Asthanam with Upayanachchiyar. 9. Madura Minakshi. 10. Kanchi Kamakshi. 11. Nataraja, Arudradarisanam. 12. Tirukkudanthai or Kumbakonam Aravamuthan decorated in four ways. 13. Komalavalli Tayar of the same place. 14. Srighatikachalam or Sholingar, Anjaneyaswami with four hands. (No other temple has this kind of murti). 15. Tiruvallur Viraraghavar.

Also of Paramahamsa Ramakrishna, Swami Vivekananda, Swami Saradananda, Mrs. Annie Besant, Madam Blavatsky, Col. Olcott.

**Cabinet size. Price Re. 1. per copy, postage and V. P. commission extra.**

## Ready for Sale.

Photo of Lord Ampthill and his staff at Conjeeveram taken with the permission of His Excellency. Also, several Picturesque Sceneries of Lower and Upper Tirupati.

To be had of T. G. APPAVU MUDALIYAR & SON,
*Photographers and Artists,*
*Triplicane, Madras.*

ADVERTS: CONTRACT RATES.—Yearly Rs. 120 for a full page and Rs. 70 for half a page. English Advts. at 1s. [illegible] column per insertion. For further particulars apply to MR. G. V. SWAMINATHA AIYAR, Secretary, D. K. Agen[illegible]

[VOL. X.] (REGISTERED-NO. M. 1..

JUNE, 1901. [No. 2.

# THE VIVEKA CHINTAMANI

## A MONTHLY TAMIL MAGAZINE AND REVIEW,

DEVOTED TO THE DIFFUSION OF GENERAL KNOWLEDGE.

# விவேகசிந்தாமணி

அறிவைப் பரவச்செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகை.

"அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர்."—குறள்

CONTENTS.



[Thick Paper Edition for Patrons.] PUBLISHED BY [Minimum Subscription Rs. 5.

C. V. SWAMINATHA AIYAR,

Secretary, Diffusion of Knowledge Agency, Triplicane,

MADRAS.

[Thin Paper Edition for the People. Price of Single Copy As. 6.]

[Subscription Price: Yearly Rs. 4; If Paid Half-Yearly Rs. 2-2.]

FOR FULL TERMS OF SUBSCRIPTION SEE INSIDE.

EDITORIAL AND PUBLISHING OFFICE: VANI VILAS, TRIPLICANE.

PRINTING OFFICE: GRAVES, COOKSON & CO.,

---

## Notice to Subscribers.

Subscribers to the Viveka Chintamani are earnestly requested to remit their subscriptions in advance before the 30th June. All subscriptions that remain unpaid after that date will be collected at the usual rate of Rs. 4.

## சந்தாதாரர்களுக்கு அறிக்கை.

சந்தாதாரர்கள் எல்லோரும் ஜூன்மீ 30உடக்குள் சந்தாத்தொகையை முன்பணமாக அனுப்பிவிட வேணுமென்று கேட்டுக்கொள்கிறோம். அந்தேதியிலிருந்து பாக்கிநிற்கும் சந்தாக்கள் வழக்கமாயுள்ள ரூ. 4 விகிதம் வசூல் செய்யப்படும். முன்பணமனுப்பத் தாமதிப்பது பத்திரிகை [illegible] வெளியாவதும், தா[illegible]ப் படுவதால் எல்லோரும் சந்தாவை முன்பணமாகவே அனுப்பிவிட வேணுமாய் மிக வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறோம்.

அ. ப. ஏஜன்ஸி,
காரியதரிசி.